# ஸ்ரீமத் பகவத்கீதை

(எளிய இனிய தமிழ்க்கவிதை வடிவில்)



கொத்தமங்கலம் விஸ்வநாதன் B.A. B.L.

# ஸ்ரீமத் பகவத் கீதை

(எளிய இனிய தமிழ்க் கவிதை வடிவில்)



**கொத்தமங்கலம் விஸ்வநாதன்** பி.ஏ.பி.எல்.,


விமலா விஸ்வநாதன்

A2, 2வது தளம், கொத்தமங்கலம் சுப்பு இல்லம்

185, (107), அவ்வை சண்முகம் சாலை,

இராயப்பேட்டை,

சென்னை - 600 014.



**பூஜ்யஸ்ரீ ஓங்காரானந்தா மஹாஸ்வாமிகள்**

**பாதங்களில்**

**பணிவான நமஸ்காரம்**



**என்னுடைய தந்தை**

**அமரர் பத்மஸ்ரீ கவிஞர்**

**கொத்தமங்கலம் சுப்பு**

**அவர்களின் பாதங்களில்**

**இந்நூலை சமர்ப்பிக்கிறேன்**

நாச்சியாரம்மன் துணை. குன்றக்குடி முருகன் துணை

# பணிந்துரை

ஓர் புத்தகத்தில் மதிப்பிற்குரிய பெரியவர்கள் அளிக்கும் வாழ்த்துரை, அணிந்துரை, பதிப்பாளர், நூலாசிரியர் வழங்குவது, முன்னுரை, முகவுரை என்று வழங்கப் பெறும். ஆனால் நூலாசிரியனாகிய நான் என்னுரையை ''பணிந்துரை'' என்னும் பெயரில் வடித்து உள்ளேன். இந்தத் தலைப்பிற்குக் காரணம் மிகப் பெரிய சாத்திர [பிரஸ்தான த்ரயத்தில் ஒன்றான] நூலைத் தமிழாக்கம் செய்யும் பணி இது. கண்ணன் காட்டிய பாதையான பகவத் கீதையின் பெருமை தனை

சாரதியாய் அன்று தேர்த்தட்டின் மீதமர்ந்து

ஆரமுதாம் கீதை அருளியவா [சாரதி]

வாரிதி சூழ் உலக மாந்தர் நலமோடு

வாழும் வழிதன்னைத் தோழன் மனம் தெளிய [சாரதி]

பயன் கருதாது கடமை புரிந்திடென்றாய்

பரம்பொருள் நானென்ற உண்மை உணர்ந்திடென்றாய்

உயர்ந்ததெல்லாம் கண்ணன் என்று அறிந்திடென்றாய்

உலகில் தருமம் நிலைக்க யுகம்தொறும் வருவேனென்றாய் [சாரதி]

என்று ஒரு இசைப் பாடல் பல ஆண்டுகள் முன் எழுதினேன். உலக மாந்தர் அனைவருக்கும் வழிகாட்டி யாக விளங்கும் கீதை எனும் ஒப்பற்ற நூலைத் தமிழில் கவிதை வடிவில் எழுத முயன்றதற்குக் காரணம் பக்தியும், ஆசையும்தான். ஆற்றல் உள்ளது என்ற

எண்ணமில்லை. ஏனெனில், உலகம் போற்றும் மேதைகள், ஞானிகள், துறவிகள் முதலானோர் கீதையை ஆராய்ந்து உரைகள் எழுதியுள்ளனர். அப்படிப்பட்ட ஒரு நூலை நான் தமிழில் கவிதை வடிவில் கொண்டு வர எண்ணியதற்கு பணிந்துரையாகத் தான் இந்த என்னுரை.

நமக்குப் பெற்றோர்களை நாம் விரும்பித் தேர்ந்தெடுக்க முடியாது. இறைவன் அவதாரம் செய்கையில் தன் பெற்றோரைத் தேர்ந்தெடுக்கிறான். ஆனால் நமக்குப் பெற்றோர் அமைவது இறைவன் அருளால் தான். அவ் வகையில் எனக்கு ஸ்ரீ கொத்தமங்கலம் சுப்பு அவர்களும் ஸ்ரீமதி அலமேலு அம்மையும் பெற்றோரென அமைந் தனர். பல துறை வல்லுனராக, உயர்ந்த மனிதராக, அன் பான பாசமிகு தந்தையாக அமைந்தவர் திரு. சுப்பு அவர்கள். அவருக்கு மகனாகப் பிறந்ததால் தான் இந்தப் பெரிய பணியில் இறங்க முடிந்தது என்று எண்ணுகின்றேன்.

50 ஆண்டுகளுக்கு மேல் என் தந்தையார் வழியில் வில்லிசை நிகழ்ச்சிகள் நடத்தி வருகிறேன். அதற்கெனப் பல சரித்திரங்களை எளிய பாடல்களாக வடிக்கும் வாய்ப்புகள் வந்தன. அதன் விளைவாகத்தான் என் னுடைய கவிதைத் திறனைப் பயன்படுத்தி இந்தப் பெரிய முயற்சியை மேற்கொண்டேன். எந்த அளவு இந்த முயற்சியில் நான் வெற்றி பெற்றுள்ளேன் என்பதை படிக்கும் அன்பர்கள் தான் கூற வேண்டும்.

என்னிடம் மிகுந்த அன்பு கொண்ட, நான் வணங்கிப் போற்றுகின்ற உயர்ந்த மனிதர்கள் சிலரின் ஆசி எனக்குக் கிடைத்துள்ளது.

இந்த நூலை எழுதத் துவங்கும் பொழுதே தேனி ஆதிகுரு ஸ்ரீப்ரக்ஞா தக்ஷிணாமூர்த்தி வித்யா பீடம்,

ஸ்ரீஸ்வாமி சித்பவானந்தா ஆஸ்ரமம், புதுக்கோட்டை புவனேஸ்வரி பீடம் முதலியவற்றின் அதிபதியும் கீதை முதலான அனைத்து வேதாந்த சாஸ்திரங்களையும் மதலை முதல் கிழவர் வரை கேட்டு ஞானம் பெறச் செய்யும் வண்ணம் உரை ஆற்றுவதில் வல்லவராகத் திகழும் ஸ்ரீ ஓம்காரானந்த ஸ்வாமி அவர்களிடம் ஓர் அத்தியாயத்தைக் காண்பித்து அன்னாரின் ஆசியைக் கோரினேன். உடனே மிக மகிழ்வுடன் என்னை ஊக்குவித்து இந்த முயற்சி வெற்றி பெறும் என்று ஆசி கூறியதுடன், என்னுடைய வேண்டுகோளுக்கிணங்கித் தானே நூலை வெளியிடுவ தாகக் கூறினார். அன்னாரின் கமலக் கரங்களால் இந்த நூல் வெளியிட உள்ளது என்னுடைய முன்னோர்கள் செய்த புண்ணியம். மாதம் தோறும் தான் நடத்தும் உபநிஷத் வகுப்புக் கிடையிலேயே இந்த கீதோபநிஷத் நூலை வெளியிட முன் வந்துள்ளது. நான் செய்த பெரும் பேறு.

மேலும் இந்த வகுப்பினைச் சிறப்புறப் பல மாதங்களாக நடத்தி வரும் சிருங்கேரி சங்கர பீடத்தின் அற்புத ஆன்மீக கலை மண்டபமாகத் திகழும் 'தத்வாலோகா'வில் இந்த வெளியீடு நடைபெற உள்ளது. இதற்கு ஆதரவு நல்கிய சிருங்கேரி மடத்திற்கும், மண்டப நிர்வாகிகளான திருமதி சரளா, திரு டி.ஆர்.ராமச்சந்திரன் இருவருக்கும் என் பணிவான நன்றி.

ஸ்ரீ ஓங்காரானந்தா சுவாமிகள் தன் அனுக்கிரஹ ஆசி உரையும் அளித்துள்ளார். அது என் பாக்கியம்.

என்னிடம் அன்பும் மதிப்பும் கொண்ட திரு ஆத்ரேயா [பிரம்மஸ்ரீ அண்ணா சுப்ரமணிய அய்யரின் சீடர்] என்னை ஸ்ரீ ஓம்காரானந்தா சுவாமிகளிடம் அறிமுகப்

படுத்தி என்னுடைய முயற்சிக்கு சுவாமிகளின் அனுக்கிரஹத்தைப் பெற்றுத் தந்தவர். அவரும் அவர் துணைவியார் திருமதி ராஜலட்சுமியும் என்னிடம் காட்டும் பரிவும் அன்பும் எடுத்துரைக்க இயலாது. மிக அழகான அணிந்துரை வழங்கியுள்ளார். மிக்க நன்றி.

பகவான் ரமணரே மீண்டும் தோன்றியுள்ளாரோ என்று எல்லோரும் வியந்து போற்றிப் பணியும் வண்ணம் வாழ்ந்து வரும் பெரியவர், ஆண்டு தோறும் சென்னை யில் பாகவத தரிசனச் சொற்பொழிவின் மூலம் ஆயிரக் கணக்கான அன்பர்களை மகிழ்விக்கும் பெருந்தகை திருவண்ணாமலையில் வாழும் நொச்சூர் ஸ்ரீவேங்கட ராமன் என்னிடம் கொண்டுள்ள பேரன்பினால் தன் அருள்வாக்கான வாழ்த்துரை வழங்கியுள்ளார். அவருக்கு என் மனமார்ந்த நன்றியும் நமஸ்காரமும்.

சேங்காலிபுரம் பரம்பரையில் ஒரு திலகமாக, உபன்யாஸத்தில் தன் தந்தையார் பிரம்மஸ்ரீ பாபுதீட்சி தரையும், பாட்டனார்கள் அனந்தராம யதீந்திரர் பிரம்மஸ்ரீ நாராயண தீட்சிதர் இருவரையும் நம் கண் முன் கொண்டு நிறுத்தும் ஆற்றல் படைத்த சேங்காலிபுரம் தாமோதர தீட்சிதர் என்பால் கொண்ட அன்பின் காரணமாக ஆசி யுரை வழங்கியுள்ளார். அன்னாருக்கு என் மனமார்ந்த நன்றி.

நான் பி.ஏ. வரையில் வடமொழி படித்தவன். எனினும் கீதை முதலான மாபெரும் சாத்திர நூல்களை நானே படித்து அறிந்து மொழி பெயர்த்தேன் என்று சொன்னால் அது மிகவும் மிகையானது. எனவே என்னுடைய நூலிற்குத் துணை புரிந்த மகான்கள் அண்ணா சுப்ரமணிய அய்யர், ஸ்வாமி சித்பவானந்தா, ஸ்வாமி சின்மயானந்தா, ஸ்வாமி தயானந்தா முதலான மகான்களின் பாத

மலர்களில் பணிகின்றேன். நான் எந்தத் தெளிவுரையோ விருத்தியுரையோ செய்யவில்லை. கண்ணன் சொன்னதை அப்படியே [As is where is] எழுதியுள்ளனே். நான் ஒருவேளை தவறாகப் புரிந்து ஏதாவது எழுதியிருந்தால் தவறுகளை எடுத்துக்காட்டுங்கள். திருத்திக் கொள்கிறேன்.

எனக்குக் கிடைத்த மற்றொரு பெரும் பேறு என்னவென்றால், சென்னை கோபாலபுரத்தில் உள்ள ஸ்ரீவேணுகோபால ஸ்வாமி கோயிலில் அர்ச்சகராகப் பணியாற்றும் ஸ்ரீ வேங்கடசுப்ரமணியன் [அம்பி] என்னுடைய கீதையிலிருந்து ஒவ்வொரு ஸ்லோகமாக கரும் பலகையில் தினம் எழுதி வைத்தார். புத்தகமாக வெளிவரும் முன்பே மக்களுக்கு என் படைப்பை அறிமுகப்படுத்திய அன்னாரின் அன்பு எனக்குக் கிடைத்தது கீதாசாரியன் வேணுகோபாலன் அருள்தானே?

கோபாலபுரம் ஆலயத்தில் திரு. வேங்கடசுப்ரமணியம் கீதையை எழுதியதற்கு அனுமதியும் ஆதரவும் அளித்த ஆலய நிர்வாகிகளுக்கு என் மனமார்ந்த நன்றி.

என் வேண்டுகோளுக்கிணங்கி கண்ணன் ஓவியம் கொடுத்துதவிய தனக்கு நிகரில்லா ஓவியக் கலைஞர் திரு. மணியம் செல்வனுக்கு என் மனமார்ந்த நன்றி.

பிழை திருத்தும் பணி மிக முக்கிய பணி. அதில் எனக்கு உறுதுணையாக இருந்த என் அன்புச் சகோதரர் சுப்பு ஸ்ரீனிவாஸனுடைய உதவியை எவ்வளவு பாராட்டினாலும் தகும். என்னுடைய இலக்கியப் பணிகளுக்கெல்லாம் துணை நிற்கும் என் குடும்பத்தினர், என் சகோதர சகோதரிகள் குடும்பத்தினர் அனைவருக்கும் நன்றி. மிகச் சிறந்த முறையில் நேர்த்தியாக அச்சிட்டு உதவிய ...ரியா நிலையம் V.ராஜசேகரனுக்கு நன்றி.



ஓம்

ஸ்ரீகுருப்யோ நம:

# Swami Omkarananda

தேனி, வேதபுரீ

ஹேவிளம்பி வருஷம்

சித்திரை மாதம் 20 ம் தேதி

(03-05-2017)

गीता मे परमाविद्या ब्रह्मरूपा न संशयः।

கீதா மே பரமாவித்யா ப்ரஹ்மரூபா ந ஸம்ஶய:। (ஸ்ரீகீதாமாஹாத்ம்யம்)

(கீதையே என்னுடைய மேலான வித்யை, அது பரம்பொருள் வடிவானது என்பதில் யாதொரு ஐயமுமில்லை)

அணிந்துரை

ஓம் நமோ நாராயணாய!

பகவான் ஸ்ரீக்ருஷ்ணர் அருளிய ஸ்ரீமத்பகவத்கீதையின் மஹிமை சொற்களுக்கு அப்பாற்பட்டது. உபநிஷத்துக்களின் ஸாரமாக, ஸ்ரீக்ருஷ்ணர் கறந்து அளித்த பால், இந்த கீதாம்ருதம்.

இதனை ஸ்ரீகொத்தமங்கலம் விச்வநாதன் அவர்கள், தமிழில் பாடல் வடிவில் இயற்றியுள்ளார். நூலின் மையக் கருத்துக்களை உள்வாங்கி, மூலநூலுக்கு முரண்படாத வகையில், சிறப்பாக மொழிபெயர்த்துள்ள திறம், பாராட்டுக்குரியது.

அனைவரும் புரிந்துகொள்ளக்கூடிய எளிய நடையிலும், ஓசை நயத்துடனும் பாடல்கள் அமைந்துள்ளன. ஒவ்வொரு ச்லோகத்திற்கும் ஒரு பாடல் அமைந்துள்ளது. ஒரு பாடலில் சில ச்லோகங்களின் கருத்துக்களும் அடங்கியுள்ளன.

**அத்தனை உடல்களில் உறைந்திடும்**
**ஆன்மா அழிவினை அடைவதில்லை**
**இத்தகை உண்மை நீஅறிந்தால்**
எவ்வுயிர்க்கும் வருந்திடத் தேவையில்லை (ஸ்ரீமத்பகவத்கீதை 2-30)

பகவான் ஸ்ரீக்ருஷ்ணர் நூலாசிரியருக்குப் பேரருள் புரிவாராக! இந்நூலை ஓதியும், பொருளுணர்ந்தும் மெய்யன்பர்கள் அனைவரும் அறிவுநலம், மனநலம், சொல்நலம், செயல்நலம், உடல்நலம், உறவுநலம், பொருள்நலம் ஆகிய அனைத்து நலன்களுடன் கூடிய ஆன்ம நலம் பெற எனது வழிபடு தெய்வங்களான ஆதிகுரு ஸ்ரீப்ரஜ்ஞா தக்ஷிணாமூர்த்தியையும், ஜகந்மாதா ஸ்ரீபுவநேச்வரியையும், ஸ்ரீதத்தாத்ரேயரையும் மனம் மொழி மெய்களால் பிரார்த்தனை செய்து உளமார வாழ்த்துகிறேன்.

உளங்கனிந்த நல்வாழ்த்துக்கள்!

ஓம் நமோ நாராயணாய!

பேரன்புடன்

ஸ்வாமீ ஓங்காரநந்த

ஸ்வாமீ ஓங்காரநந்த

# வாழ்த்துரை

## ஸ்ரீ வெங்கடராமன்

நொச்சூர்

'ஸ்ரீமத் பகவத் கீதை'யாவது, ரிஷிகளால் போற்றப் படும் 'பிரஸ்தானத்ரயம்' என்பதில் மூன்றில் ஒன்றான தனிச்சிறப்புடையதாகும். இந்த கீதாம்ருதத்திற்கு அநேக ஆசார்ய புருஷர்கள் பாஷ்யம் செய்துள்ளார்கள். குறிப் பாக, சங்கரர், ராமானுஜர், மத்வாசாரியார் ஆகியோர்கள் வியாக்கியானம் அளித்துள்ளனர். ஆதிசங்கரர் இந்த அம்ருதத்தை 'சமஸ்த வேதாந்தசார சங்க்ரஹபூதம்' என விசேஷப்படுத்தியுள்ளார். மேலும் ஞானேஸ்வரர், பால கங்காதரதிலகர், காந்தி, பாரதி முதலானோர்கள் பல மொழி களில், இதற்கு விரிவான உரையும் வழங்கியுள்ளனர். சமீப காலத்தில், ஸ்ரீ ரமண பகவான், கீதையை நித்ய பாரா யணத்திற்கு அனுகூலமாகவும், இதன் சாரத்தையும் மூலக் கருத்தையும் வெளிப்படுத்துவதற்கு என்றே, 42 ஸ்லோகங் களைப் பொறுக்கி எடுத்து, 'பகவத்கீதாசாரம்' என்ற பெயரில் வெண்பாக்கள் உருவில் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

இதனை முழுவதுமாக திரு. கொத்தமங்கலம் விஸ்வ நாதன் அவர்கள் தூய தமிழில் வடிவம் அமைத்துள்ளார். அவருடைய இந்த சீரிய முயற்சி மிகவும் போற்றுதற் குரியது என்பதில் ஐயமேதுமில்லை. தியான ஸ்லோகம் முதல் துவங்கி, கீதை 18-ம் அத்தியாயம் முடிய, சுந்தரத் தமிழில் ஒரு சித்திரம் என்னும் வண்ணம் வரைந்துள்ளார்.

முதலில்

''சர்வோபநிஷதோ காவோ தோக்தா

கோபால நந்தன:

என்னும் தியான ஸ்லோகத்திற்கு
'எல்லா உபநிடதம் பசுக்கள்
இடைக்குலக் கண்ணன் கறப்பவனாகி
வல்லவன் பார்த்தன் கன்றென நின்றிட
வழங்கிடும் கீதை எனும் உயர்பாலாம்
அமுதம் இதனை அருந்துவோர் அறிஞர்'
என அழகாக மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.
மேலும்
மூகம் கரோதி வாசாலம் பங்கும்
லங்கயதேகிரிம்
என்பதற்கு,
'ஊமையைப் பேசவைத்திடும் அருளை அளிப்பவன் எவனோ
உயர்ந்த மலையை முடவன் தாண்டிட வைப்பவன் எவனோ'
என்று கூறியது மேம்பட அமைந்துள்ளது.

கீதையின் 2–வது அத்தியாயமான ஸாங்க்ய யோகத்தில், மிகப் பிரசித்தமான இதயம் போன்ற 16–ம் ஸ்லோகமான [2–16]
நாஸதோ வித்யதே பாவோ
நபாவோ வித்யதே சத:
என்பதன் தமிழ் மொழி பெயர்ப்பு
'இல்லாத பொருளுக்கு இருப்பில்லை
இருப்பது என்றும் மறையாது
நல்லதோர் முடிவாம் இவ்வுண்மை
நன்கு உணர்ந்தவர் கண்டனரே' என்று இந்நூலாசிரியர் கொடுத்துள்ளது மிகப் பொருத்தமே.

மேலும் 10–ம் அத்தியாயம் 20–ம் ஸ்லோகம்

அஹமாத்மா குடாகேச சர்வபூதாஸயஸ்த்த:

என்னும் எல்லாம் ஆத்மாவே என்பதற்கு,

'அனைத்துயிர் இதயம் தனிலெல்லாம் அமரும் ஆன்மா நானே தான்' என்பதையும் கூர்ந்து காண்க. கீதையின் முடிவில், 18-ம் அத்தியாயம் 54-ம் ஸ்லோகம்.

ப்ரஹ்மபூதஷா ப்ரசன்னாத்மா நசோசதி

ந காங்க்ஷதி

என்பதன் மொழிபெயர்ப்பு.

'பிரம ஞானத்தில் உறுதி பெற்றிருப்பவன்

தெளிந்த மனம் உடைத்தவன் ஆகி

வருத்தம் வேட்கை இரண்டும் விடுத்து

அனைத்துயிரும் சமம் எனவே கருதி

அளவிலா பக்தி என்பால் அடைகிறான்' என்பது

சிகரம் போன்றவாறு அமைந்துள்ளது.

மூலக்ரந்தமான கீதையின் ஸம்ஸ்கிருத ஸ்லோகங்களுடன், உரைநடையிலுள்ள தமிழ் மொழி பெயர்ப்பின் துணை கொண்டு, இதனை மனம் உருகிப் பாராயணம் செய்யும் ஆன்மீக அன்பர்கள் பரிபூரண நிறைவும், அமைதியும் அடையப் பெறுவது உறுதி. திரு விஸ்வ நாதன் அவர்கள், இம்மொழி பெயர்ப்பினால், தமிழ்த் தாயின் மார்பில் பின்னுமொரு கீதாமாலையைத் திறம்பட அணிவித்துள்ளார்.

இந்த மகத்தான அரும்பணியை, ஒரு திவ்ய தபஸாக, மிகுந்த ஸ்ரத்தையுடன் செவ்வனே செய்துள்ள திரு. விஸ்வநாதன் அவர்களுக்கு நீண்ட ஆயுள், ஆரோக் கியம், நிறைவு முதலானவற்றை அருளுவதற்கு பகவானைப் பிரார்த்திக்கிறோம்.

# வாழ்த்துரை



## சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ
## தாமோதர தீக்ஷிதர்

மிகவும் உயர்ந்த ப்ருஹ்மவித்தையும் ஸகல வேத சாஸ்திர உபநிஷத் ஸாரமான ஸ்ரீ பகவானுடைய வாக் அம்ருதமான ஸ்ரீ கீதா அம்ருதத்தை எளிய மக்களும் புரிந்து கொள்ளும்வண்ணம் இனிய தமிழில் கவிதை வடிவில் ஸ்ரீமான் கொத்தமங்கலம் விஸ்வநாதன் அமைத்துக் கொடுத்து உள்ளார். சாதாரணமாக ஸம்ஸ்க்ருத ஞானத்தினால் மட்டும் புரிந்து கொள்ள முடியாத பகவத் கீதையை நன்கு மனதில் வாங்கிக் கொண்டு அவருடைய கவிதா சக்தியாலும் பிரவசன சக்தியாலும் அமைத்துக் கொடுத்து உள்ளார்.

உயர்ந்த ஒரு கலைக் குடும்பத்தில் உதித்ததாலும் [ஸ்ரீமான் கொத்தமங்கலம் சுப்பு புத்திரர்] ஸ்ரீ பகவானிடமும் மகான்களிடமும் உள்ள பக்தியினாலும் இது இவருக்கு சாத்யமாயிற்று. ஏன் என்றால் ஸ்ரீபகவத் கீதையை நாம் புரிந்து கொள்வதே கடினம். பிறருக்குப் புரிய வைப்பது அதைவிட கடினம். எளிய முறையில் எல்லோரும் புரிந்து கொள்ளும் வண்ணம் இதை அமைத்திருப்பது இதன் பெருமை.

பிறப்பு, இறப்பு, நோய், மூப்பு, துன்பம் முதலியவற்றைப் போக்கும் ஞானத் தேனாம் கீதா அமுதத்தை தமிழ்ப்பாலில் கலந்து வாயில் ஊட்டிய விஸ்வநாதன் செயல் காசி விஸ்வநாதன் செயலே.

ஸ்ரீ பகவானுடைய கிருபையால் மேன்மேலும் இது போன்ற செயல்கள் தொடர்ந்து இவர் செய்ய நீண்ட ஆயுளும் ஆரோக்யமும் மன அமைதியும் பக்தியும் ஸ்ரீ பகவான் இவருக்கு அருளவேண்டும்.

தாமோதர தீக்ஷிதர்
29.07.2016

R.B.Athreya

27, First Street, Gopalapuram
Chennai - 600 086
Mobile: 9884362219

# Gita in Tamil verses

There is a proverb in Tamil which says that what is born to a tiger cannot be a cat. Shri S.Visvanathan, who is the son of the legendary Kothamangalam Subbu, eminently proves this saying. He follows in the footsteps of his illustrious father in Pravachanam and Villu Paattu performances displaying his musical and oratorical skills.

As if to cap all his achievements, he has embarked and successfully completed a project very dear to him that is to render the 700 verses of Bhagavat Gita in Tamil. This is a monumental effort and needs to be hailed by all devotees besides those engaged in any literary activity.

The Gita verses in Tamil, as composed by Shri Visvanathan do not look to be a mere translation but appear to have a content and message as conveyed in the original Sanskrit script. The rendering is in simple and easy style, convenienct for both recital and committing to memory.

Let us all invoke the blessings of Lord Krishna for Shri Visvanathan and for the popularity of his great work.

***- R.B.Athreya***

# ஸ்ரீமத் பகவத் கீதை

## (எளிய, இனிய தமிழ்க் கவிதை வடிவில்)



### தியான ஸ்லோகங்கள்

ஓம்

1. நாரணன் நேரில் பார்த்தனுக்கு
போதனை செய்யப் பெற்றவளே
பாரதம் தன்னுடை நடுவினிலே
வியாஸரால் அமைக்கப் பெற்றவளே
அத்துவைதம் எனும் அமுதினையே
அன்புடன் பொழிபவள் மூவாறு
அத்தியாயம் கொண்டே மானிடர்
பவப்பிணி தனையே போக்குபவள்
இறைவி கீதே! பகவதித்தாயே
என்றும் உன்னை தியானிக்கின்றேன்

2. பரந்த புத்தியும் தாமரை இதழ் என
விரிந்த விழிகள் கொண்ட வியாஸரே

சிறந்த பாரதம் எனும் உயர் எண்ணை
நிறைந்த ஞான விளக்கேற்றினீர் வணக்கம்

3. அடைக்கலம் அடைந்தவர் விரும்பு மனைத்தும்
அளிக்கும் கற்பகத்தருவாய் விளங்கி
கிடைத்தற்கரிய ஞானமுத்திரை
காட்டிடும் ஓர் கரம் கொண்டவனாய்
பசுக்களை ஓட்டிடப் பிரம்பினை ஏந்தி
கீதையாம் அமுதம் தனையே கறந்து
நிசமாய் உய்ந்திடச் செய்திடும் கண்ணா
நித்தம் உன்உத்தம பதமலர் பணிந்தேன்

4. எல்லா உபநிடதம் பசுக்கள்
இடைக்குலக்கண்ணன் கறப்பவனாகி
வல்லவன் பார்த்தன் கன்றென நின்றிட
வழங்கும் கீதை எனும் உயர் பாலாம்
அமுதம் இதனை அருந்துவோர் அறிஞர்

5. வசுதேவன் மைந்தனாக வந்த தேவதேவனாம்
வள்ளல் அன்னை தேவகிக்கு ஆனந்தம் தந்தவன்
அசுரரான கம்ஸ சாணூரனை வதைத்தவன்
அகில உலக குருவான கண்ணனை வணங்குவோம்

6. குருக்ஷேத்திரப் போர்க்கள ரண நதி
இரு கரை வீட்டுமன் துரோணரும் ஆவரே

ஜயத்ரதன் நீராம் காந்தாரமன்னன்

நீலோத்பலமலர், சல்லியன் சுறாமீன்

கிருபனும் கர்ணனும் நீரோட்டமும் அலைகளும்

அசுவத்தாமன் விகர்ணன் மகரமீன்கள்

துரியோதனன் நீர்ச்சுழலாய் இருந்தவன்

கண்ணன் தனைப் படகோட்டியாய்க் கொண்டு

கடந்தனர் பாண்டவர் ரணநதி அதனை

7. பராசரர் மைந்தரான வேதவியாஸர் வாக்கெனும்

புனித நீரில் உதித்ததான பலபல நற்கதைகளாம்

சிறந்த மகரந்தம் தனைத் தன்னிடத்தில் கொண்டதாய்

ஹரியின் கதைச் சொற்பொழிவால் அலர்ந்து நன்கு திகழ்வதும்

அவனிதனில் நல்லவராம் வண்டுகளால் நாள்தோறும்

ஆனந்தமாய் அருந்துகின்ற பேறுபெற்ற அற்புதக்

கீதை மூலம் நறுமணத்தைப் பெற்றிருக்கும் பெரியநூல்

குற்றமிலா பாரதம் எனும் காவியமாம் தாமரை

கலியின் தோஷம் விலக்கிடவே விரும்புகின்ற மானிடன்

நலம் பெறவே உதவிடவே நல்ல துணை ஆனதாம்

8. ஊமையைப் பேச வைத்திடும் அருளை அளிப்பவன் எவனோ

உயர்ந்த மலையை முடவன் தாண்டிட வைப்பவன் எவனோ

தேமதுரச் சொல் கொண்டே அப்பரமானந்த
மாதவனைத்
தோத்திரம் செய்தே அவனிரு தாள்கள் பணிந்தே
வணங்குகின்றேன்

9. பிரமன், வருணன், இந்திரன் உருத்திரன்
மருத்தெனும் தேவரும் திவ்வியத் துதிகளால்
தினமும் வணங்கிடும் தெய்வம் எதுவோ
திவ்விய ஸாம கானம் செய்பவர்
அங்கமும் பதமும் உபநிஷதங்களும்
அமைந்த மறைகளால் பாடுவது எவரையோ
யோகிகள் தியானம் செய்தே மனதினை
எவரிடம் வைத்து உணருகின்றனரோ
அசுரரும் சுரரும் எவருடைமுடிவை
அறிவதில்லையோ அவர்பதம் பணிவோம்

அரச மரத்தடி மேடை தன்னை
ஆலயம் என நீ கொண்டாலும்
அரச போகம் அன்பருக்கே நிதம்
அளிக்கும் கணபதிப் பெருமானே
வரிசையாய் இரண்டு சேனை அணி
வகுத்தே நிற்கும் போர்க்களத்தில்
பரிசெனப்பரமன் தரும் கீதை
பைந்தமிழில் பாட அருள் புரிவாய்

# ஸ்ரீமத் பகவத் கீதை

## முதல் அத்தியாயம்

## அர்ஜுன விஷாத யோகம்

### திருத ராஷ்டிரன் கூறியது

1. என்னுடை மைந்தரும் பாண்டவரும்
இரு தரப்பினரும் கூடி நின்று
தன்னிகரில்லா அறக்களமாம்
குருகளம் தன்னில் போர் விழைந்து
என்ன செய்தனர் என்றுள விவரம்
எடுத்து உரைப்பாய் ஸஞ்ஜயனே

ஸஞ்ஜயன் கூறியது

2. பாண்டவர் சேனை அணிவகுப்பைப்
பார்த்து துரோண குருவிடத்தில்
ஆண்டகை துரியோதன மன்னன்
அண்மையில் சென்றிம் மொழி புகன்றான்

3. அறிவிற் சிறந்தவன் உம் சீடன்
அரசன் திருட்டத்யும்னனவன்
துருபத மன்னன் தன் மைந்தன்
தானே வகுத்து அமைத்திருக்கும்
பாண்டவர் மாபெரும் சேனை தனைப்
பார்த்துடுவீர் எம் குருநாதா

காண்பீர் வலிமை மிகு வீரர்

களத்தில் குவிந்தனர் காண்பீரே

4, 5, 6 வில்லாளிகள் பலர் இங்குள்ளார்

வீமன் அ[illegible]ர்சுனன் இருவருக்கும்

எல்லா வகையிலும் சமமெனவே

இருக்கும் சூரர் பலருள்ளார்

சாத்யகி விராடன் யுதாமன்யு

சேகிதானத்தின் மன்னவனும்

ஆத்திரம் கொண்ட துருபதனும்

அன்னவன் மகனும் தான் காண்பீர்

குந்தி போஜன் புருஜித்தும்

திருஷ்டகேது சைப்யனுமே

எந்தையே சுபத்திரை திரௌபதியாம்

இருவர் மைந்தரும் இங்குள்ளார்

வீரியம் மிக்க காசி மன்னன்

உத்தமௌஜன் எனும் பலவான்

தேர்ப் போர் திறமை மிகக் கொண்ட

தீரர் பலரும் இங்குளரே

7. எந்தன் அணியின் நாயகரை

என்னுடை வீரரில் சிறந்தவரை

அந்தண மணியே நீர் அறிய

அடியவன் உரைப்பேன் கேட்டிடுவீர்

8, 9 தாங்கள், வீட்டுமர், நம் கர்ணன்
தங்கள் மகன் அசுவத்தாமனவன்
யாங்கணும் போரில் வெற்றி பெறும்
எந்தை கிருபரும் விகர்ணனுமே
பூரிஸ்வரஸ் ஜயத்ரதன் முதலோர்
போரில் எனக்கென உயிர் கொடுத்தோர்
சீரிய ஆயுதம் பல தரித்த
வீரர்கள் அனைவரும் இங்குளரே

10. வீட்டுமர் காக்கும் பெரும் சேனை
வெற்றி பெறும் அளவில் இல்லை ஐயா
நாட்டம் வெற்றியில் மிகக் கொண்ட
வீமன் அணி பலம் மிகுந்ததுவே

11. ஆதலால் நீங்கள் அனைவருமே
அவரவர் அணிகளில் நின்று கொண்டு
மாதவர் வீட்டுமர் தமைக் காக்கும்
மேலாம் பணிதனைப் புரிந்திடுவீர்

12. பகைவரை வருத்தித் தவிக்க வைப்போன்
பாட்டன் குருகுலப் பெரியவனாம்
தகைமை மிகுத்தோன் தன் மன்னன்
துரியன் மனதில் மகிழ்ச்சியுற
சிங்கம் எனவே குரலுயர்த்தி
சீரிய கர்ச்சனை தான் செய்து

சங்கம் தனையே தானெடுத்து
சமர்க்களம் தன்னில் முழங்கிடவே

13. மத்தளம் தப்பட்டை கொம்புகளும்
மற்றும் பேரிகள் சங்குகளும்
யுத்த களத்தில் எழுப்பிய பேர்
ஒலியோ எங்கும் நிறைந்ததுவாம்

14. வெண்மை நிறத்துப் பரிகள் பூட்டிய
விந்தை மிகு பெருந்தேர் மீது
கண்ணன் அருச்சுனன் அமர்ந்தபடி
களத்தில் தெய்வீகச் சங்கொலிக்க

15, 16 பாஞ்சசைனியம் எனும் சங்கம்
பரந்தாமன் கண்ணன் தான் முழங்க
பார்த்தன் தேவதத்தம் எனும்
பெருமை மிகு சங்கம் தனை முழங்க
பெரு வயிறும் மிகு வலிமை கொண்டோன்
பீமன் பௌண்ட்ரம் எனும் சங்கும்
தருமன் அனந்த விஜயம் எனும்
தனிப் பெரும் சங்கும் முழங்கினரே
நகுலன் சகதேவன் இருவருமே
சுகோஷன் மணி புஷ்பகம் எனத்
திகழும் சங்குகள் தமை எடுத்துத்
திவ்விய நாதம் எழுப்பினரே

17, 18 வில்லாளிகளில் தலை சிறந்த

வித்தகன் காசி மகராசன்

வல்லமை மிகுந்த தேராளி

சிகண்டி திருட்டத்யும்னனுமே

போரில் எவரும் வெல இயலா

வீரன் சாத்யகி துருபதனும்

சீரிய திரௌபதி மைந்தர் அபிமன்யு

சங்குகள் கொண்டு முழக்கினரே

19. விண்ணையும் மண்ணையும் தான் நிறைத்த

வீரிய மிக்க அப்பேரொலியோ

மண்ணை ஆளும் மன்னனுடை

மைந்தர் இதயம் பிளந்ததுவே

20, 21, 22, 23

குரங்குக் கொடியோன் அருச்சுனனும்

கவுரவ வீரர் தமைக் கண்டு

கரத்தினில் வில்லைத் தானேந்தி

கணைகள் தொடுத்திடும் தருணம்வர

கண்ணனிடம் இம்மொழி புகன்றான்

அருச்சுனன் கூறியது

''கண்ணா இந்தப் போர்க்களத்தில்

எண்ணம் நல்லதே இல்லாது

இருக்கும் துரியன் தனக்குதவ

போரை நடத்தும் ஆவலுடன்
யார் யார் இங்கு வந்துளரோ
நேரில் அவர்களை நான் காண
தேரினை இருசேனை இடை நிறுத்து

24, 25

சஞ்சயன் கூறியது:
உறக்கம் தனை வென்ற அருச்சனனின்
உரையைக் கேட்ட இருடிகேசன்
இரண்டு சேனைகள் தம் நடுவே
துரோணர் வீட்டுமர் தம் எதிரில்
வந்துள அரசர் தம் எதிரில்
வள்ளல் கண்ணன் தேர் நிறுத்தி
இந்த இடம் தனில் கூடி நிற்கும்
''எல்லா கவுர வீரரைக் காண்'' [என]

26, 27 அணிகள் இரண்டிலும் தான் நிற்கும்
அண்ணன் தம்பியர் மாமன் மார்
வணங்குதற்குரிய குருமார்கள்
வேண்டிய தோழர் பாட்டன் மார்
பேரன்கள் தமக்குப் பெண் கொடுத்தோர்
பிரிய மிகு நண்பர் தந்தையரும்
போர் செய நிற்கும் காட்சி கண்டு
பார்த்தன் வருந்திப் பேசலுற்றான்

28, 29, 30

கண்ணா இங்கு போர் புரியக்

கூடியே நிற்கும் உறவினரைக்

கண்டவுடன் எந்தன் அங்கமெலாம்

களைத்தன வாயும் உலர்ந்ததைய்யா

உடலம் நடுங்கி மயிர்கூச்சல்

உண்டானதுவும் கண்டிடுவாய்

திடமாய் நிற்கும் சக்தியில்லை

தேகம் கனலென எரியுதைய்யா

என் மனம் ஓர் நிலை நில்லாமல்

இங்கும் அங்கும் சுழல்கிறது

என் கைவில்லாம் காண்டீபம்

என் கரம் விட்டு நழுவுதைய்யா

எழுந்து நின்றிடும் சக்தியதும்

இழந்த நிலையில் இருக்கின்றேன்

புன்மை காட்டும் அபசகுனம்

பற்பல நானும் பார்க்கின்றேன்

31, 32, 33, 34, 35

என்னுடை உற்றாரை இப்போரில்

கொன்றே பெறும் நன்மை ஏதுமிலை

அரசும் சுகமும் நான் வேண்டேன்

அரசால் நமக்குப் பயன் என்ன?

பரமா! போகம் நிலற வாழ்வால்
பயன் தான் என்ன? புகன்றிடுவாய்

அரசும், அதுதரும் சுகம் இன்பம்
அனைத்தும் எவர்க்கென விரும்புவமோ
பொருளும் உயிரும் துறந்தே தான்
போரில் அவர் கூடி நிற்கின்றார்
வகை வகையாய்ப் பல உறவினர்கள்
வணங்குதற்குரிய குருமார்கள்
பகையுணர்வோடெனைக் கொன்றிடவே
படைகள் திரட்டி வந்தாலும்
மூவுலகாளும் பெரும் பேறு
மேவியே எந்தனை அடைந்தாலும்
தேவா! இவர்களைக் கொல விரும்பேன்
தாரணி ஆண்டெனக் காவதென்ன?

36. ஆததாயிகள் என அழைத்திடவே
அருகதை கொண்டவர் அவர் எனினும்
மாதவா! அவர்களை மடிப்பதனால்
மாபாவம் அன்றோ நமைச்சேரும்

37. திருதராட்டிரன் வழிப்பிறந்த
உறவினர் தமையே கொல்லுவது
சரியென்று அவர்களை வதைப்பதனால்
சுகம் தனைப் பெறுவது எவ்வாறு?

38, 39 பேராசை கொண்ட காரணத்தால்
புத்தியை இழந்து குல நாசம்
சேர்க்கும் தீங்குகள் தாமறியார்
சீரிய நண்பர் தமக்கின்னல்
செய்வதனால் விளை பாவமதும்
சிறிதும் அறியா திருந்திடுறார்
ஐயனே குல நாசம் செய்வதனால்
அடைந்திடும் விளைவுகள் தெளிவுறவே
காணும் நாமும் இப்பாவம்
கொடிதென்று விலகாதிருப்பதுவோ?

40, 41 நாசமடைந்த குலமென்றால்
நெடுநாள் தொடர்ந்து இருந்திட்ட
மாசிலாத குல தருமமெல்லாம்
மறைந்திடும் நிலை தான் வந்துவிடும்
குலத்தில் மறமே பரவி நிற்கும்
குல மகளிர் கற்பை இழந்திடுவார்
குல மகளிருக்கிந்த நிலை வந்தால்
கலந்திடும் பலப்பல வருணங்கள்

42. அத்தகை சாதிக் கலப்புகளால்
அழிந்த குலமும் அழித்தவரும்
உத்தம கதியின்றி நரகத்தில்
உழன்றிடும் நிலைமை தனை அடைவார்

குலத்தில் பிறந்து முன் மறைந்தோர்
குடித்திட நீரும் உணவுமின்றி
நலமே இல்லா கதிதனையே
நாளும் அடைந்து துன்புறுவார்

43. பாதகங்கள் செய்து குலமழித்தோர்
பண்ணிய சாதிக் கலப்புகளால்
ஆதி முதல் வந்த குல, அறங்கள்
சாதி அறங்களும் அழிந்துவிடும்

44. குல ஒழுக்கம் தனை விடுத்தவர்கள்
நிலையாய் நரகம் புகுவோர் எனப்
பலரும் சொல்லக் கேட்டுள்ளோம் எனப்
பார்த்தன் மேலும் பேசலுற்றான்

45. அரசு தரும் இன்பம் பெறுவதற்கு
ஆசை மிகக் கொண்ட காரணத்தால்
உறவினரைக் கொல்லும் பெரும்பாவம்
உவந்தே செய்திட அந்தோ! துணிந்தோம்

46. ஆயுதம் கையில் ஏந்தாமல்
அமர் புரியாமலும் நிற்கும் எனை
ஆயுதம் ஏந்திக்கவுரவர்கள்
அழித்தால் அதுபெரும் நன்மை என்பேன்

47. ஸஞ்ஜயன் கூறியது:

அருச்சுனன் இவ்வண்ணம் தான் புகன்று
அம்புடன் வில்லினைத் தான் எறிந்து
நிறைந்திடு துயரால் மனமுடைந்து
வருந்தித் தேர்த்தட்டின் மீதமர்ந்தான்

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும், யோக சாஸ்திரமாயும்
ஸ்ரீ கிருஷ்ணனுக்கும், அர்ஜுனனுக்கும்
சம்பாஷணையாயும்
விளங்கும் ஸ்ரீமத் பகவத்கீதை எனும் உபநிஷத்தில்
அர்ஜுன விஷாத யோகம் என்ற பெயர் பெற்ற
முதல் அத்தியாயம் முற்றும்



# ஸ்ரீமத் பகவத் கீதை

## இரண்டாவது அத்தியாயம்

## ஸாங்க்ய யோகம்

ஸஞ்ஜயர் கூறியது:

1. மல்கிடும் கண்ணீர் விழிகளையே
மறைத்திடும் நிலையில் உள்ளவனாய்
எல்லையில்லாத கருணையினால் மனம்
இரங்கிய அர்ச்சுனன் தன்னிடமே
இத மொழி கண்ணன் புகன்றனனே

ஸ்ரீ பகவான் கூறியது:

2. சிக்கல் நிறைந்த இந்நிலையில்
சீரிய ஆரியர்க் கொவ்வாத
இக்குழப்பம் உந்தன் மனதினிலே
எங்கிருந்து தான் வந்ததப்பா?
இன்னிலை விண்ணகர் வழியடைக்கும்
இருக்கும் புகழை இழக்க வைக்கும்

3. இதயத்தில் அலியின் இயல்பொழித்து
எழுந்திரு உனக்கிது பொருந்தாது
எதிர்ப்பவர் தம்மை வாட்டிடுவோய்
மனதின் தளர்ச்சியை நீக்கிவிடு

அர்ஜுனன் கூறியது:

4. மதுவெனும் அரக்கனை வதைத்தவனே
மற்றுள பகைவரை மாய்த்தவனே
பூசைக்குரிய வீட்டுமனார்
புனிதர் துரோணர் மீதெல்லாம்
வீசியே சரங்கள் தமை விடுத்து
வீரப்போர் செய்வ தெவ்வாறு?

5. வணங்குதற்குரிய குருமாரை
வதைக்காதிருந்து இவ்வுலகில்
உணவுக்குப் பிறரிடம் கையேந்தி
உண்ணும் நிலையே சிறந்ததன்றோ?
ஆசிரியர் தமை நான் கொன்றால்
அன்னவர் உதிரம் தோய்ந்திருக்கும்
காசும் பொருளும் இன்பமெல்லாம்
கைவரப் பெற்று அனுபவிப்பேன்

6. வெற்றியை அடைவது நாம்தானா?
மற்றவரோ எனும் இவ்விரண்டில்
உற்றது ஏதென உணர்ந்திலன்நான்
உற்றவர் திருதராட்டிரன் மக்களின்
உயிரை மாய்த்து உயிர் வாழ்வதோ?
எவரைக் கொன்று நாம் வாழும்
இட்டம் இலாது உள்ளோமோ

அவர்கள் எந்தன் முன் வந்து
அமர் செய்ய எதிர்த்து நிற்கின்றார்

7. இரக்கத்தால் இயற்கைக் குணமிழந்தே
கடமையில் திகைத்த நிலைதனிலே
இருக்கும் நான் உனைக் கேட்கினறேன்
ஏதும் அறியாதிருப்பவனாய்
நிற்கும் எனக்கெது நலம் பயக்கும்
நிச்சயம் செய்து நீ உரைத்திடுவாய்
அற்புத பதமலர் சரண் அடைந்தேன்
அய்யனே நான் உய்ந்திட ஆணை என்ன?

8. அவனியில் எதிரியே இல்லா நிலையும்
அத்தனை வளங்களும் அமைந்த அரசும்
எவரும் பணிந்திட, தேவரும் வணங்கி
ஏற்றிடும் உயர்ந்த பதவிகள் அடைந்தும்
எந்தன் புலன்களை உலர்த்தி வருத்தும்
இன்னல் செய்துயரம் நீங்கச் செய்திட
ஏது வழியென்று அறிந்திலன் என்றுமே
ஈசனாம் கண்ணனின் நேசன் புகன்றனன்

9. மன்னவா இவ்வண்ணம் உரைத்துப் பார்த்தனும்
மாதவன் தன்னிடம் ''போர்புரியேன்'' என
அன்னவன் கூறி வாய்மூடி மௌனியாய்
அமர்ந்தனன் கண்ணனும் மறுமொழி புகன்றனன்

10. வருந்தி நிற்கும் அருச்சுனன் தன்னிடம்
வாயில் புன்னகை அரும்பிடக் கண்ணனும்
இருபுறம் சேனைகள் இவைகளின் நடுவினில்
இருந்தவன் இவ்வணம் மொழிகள் இயம்பினான்

ஸ்ரீ பகவான் கூறியது:

11. கற்றவர் போலவே பேசிடும் அருச்சுனா
கவலைப்படுவதற் கருகதை என்பதே
அற்ற மனிதர் தம்மையே குறித்து
அகத்தினில் கவலை கொண்டனை நீயும்
இறந்தவர் மற்றும் உயிரோடிருப்பவர்
இவர்களைப் பற்றி அறிவினிலே
சிறந்த ஞானியர் கவலையுறார்
செல்வா இதனை அறிந்திடு நீ

12. என்றும் நான் இல்லாதிருந்ததில்லை
என்னைப் போல் நீயும் அவ்வண்ணமே
நின்றிருக்கும் அரசரும் அவ்வண்ணமே
நாமெல்லாம் இலா நாள் இனியும் இலை

13. உடலில் உறையும் ஆன்மாவை
உடலின் பருவங்கள் தொடுவதில்லை
உடலை விடுத்து வேறுடலை
அடையும் பொழுதில் ஆன்மாவும்
பாதிப்பு ஏதும் இல்லாத

பக்குவ நிலையில் இருப்பதனால்
ஓதி உணர்ந்த தீரன் என்றும்
உள்ளம் மயக்கம் கொள்வதில்லை.

14. புலன்களைந்தும் பொறிகளுமே
பொருள்களைத் தொடுகின்ற பொழுதினிலே
பலபல உணர்ச்சிகள் தோன்றுமவை
நிலையாய் இல்லாமல் மறைந்து விடும்

15. இன்பம் துன்பம் இரண்டினையும்
ஏற்றுச் சமமெனக் கொள்பவனும்
தன் மன வலிமை மிகுந்ததனால்
தீரன் எனவே திகழ்பவனும்
எவனோ அவனை இவைகளெல்லாம்
என்றும் கலங்கிடச் செய்யாது
அவனே அழிவிலா வீடென்னும்
அரும் பெரும் பேறு பெறற்குரியோன்

16. இல்லாத பொருளுக்கு இருப்பில்லை
இருப்பது என்றும் மறையாது
நல்லதோர் முடிவாம் இவ்வுண்மை
நன்கு உணர்ந்தவர் கண்டனரே

17. அனைத்தும் எதனால் நிறைந்துளதோ
அது அழியா தென்பது உறுதியப்பா.
தினையளவும் மாற்றம் இல்லாத
தனிப்பொருள் இதனை அழிப்பவன் யார்?

18. அளவும் அழிவும் இல்லாது
அன்றும் இன்றும் என்றும்தான்
உளதாய் நிலைத்த ஆன்மாவின்
உடல்கள் முடிவினைத் தான் அடையும்

19, 20 கொல்லுவது ஆன்மா எனும் கூற்றும்
கொலப்படும் ஆன்மா எனும் வாக்கும்
சொல்லும் இருவரும் உண்மை தனைச்
சிறிதும் உணரா மானிடரே

ஆன்மா என்றும் கொல்லாது
ஆன்மா கொல்லப் படுவதில்லை
ஆன்மா என்றும் பிறப்பதில்லை
ஆன்மா என்றும் இறப்பதில்லை
இல்லாதிருந்தது உதிப்பதில்லை
இறப்போ பிறப்போ இலை அதற்கு
என்றும் இருக்கும் பழையதது
இறப்பை அடைவது உடல் ஒன்றே

21. என்றும் உளதது என்பதையும்
இல்லை அழிவதற்கென்பதையும்
அன்று முதல் அது இன்று வரை
அப்படியே இருப்பதென்பதையும்
பிறப்பும் குறைவிலாப் பொருள் என்றும்
புரிந்து கொண்ட மானிடன் தான்

அறிவிற் சிறந்தோன் அன்னவனோ
அழித்திடான் பிறரால் அழிந்திடான்

22. அதிகம் கிழிந்த ஆடை தனை
அவிழ்த்துத் தூர எறிந்து விட்டு
புதிதாய் ஆடை அணிவதுபோல்
புரியும் செயல் தான் மேனிக்குள்
உறைபவன் நைந்த உடலம் தனை
உதறித்தள்ளி எறிந்ததே தான்
மறுபடி வேறு உடலைத் தன்
உறைவிடமாக அடைகின்றான்

23. ஆயுதம் ஆன்மா தனைச் சிதைக்கா
வாயுவும் அதனை உலர்த்தாது
தீயின் வெப்பம் எரிக்காது
தண்ணீர் அதனை நனைக்காது

24. காற்றால் ஆன்மா உலராது
காலமெல்லாம் அது அழிவின்றி
மாற்றம் ஏதும் இல்லாமல்
மாயிரு ஞாலம் தனில் என்றும்
வெட்டுதற்கரிதாய், எரியாமல்
வீசும் காற்றில் உலராமல்
கொட்டும் நீரில் நனையாமல்
கொஞ்சமும் அசைவே இல்லாமல்

25. மனது புலன்களுக் கெட்டாமல்
மாற்ற முடியா நிலை கொண்ட
தனிப் பொருள் என்றே அறிந்திடுவாய்
தவித்து வருந்துதல் தகைமையிலை

26. ஆன்மா பிறக்கும் இறக்கும் என
அகத்தில் எண்ணம் நீ கொண்டாலும்
தானதை எண்ணி வருந்திடவே
தகுதி உனக்கிலை திண் தோளா

27. பிறந்தவன் இறப்பது உறுதியன்றோ!
இறந்தவன் பிறப்பதும் நிச்சயமே
இரண்டையும் தவிர்க்க இயலாது
எனவே வருந்திப்பயன் என்ன?

28. காணாதிருப்பதே முதலாயும்
காட்சிக்குரியதாய் இடையாயும்
காணாதிருப்பதே முடிவாயும்
காசினிப் பொருள்கள் இயல்பதுவே
யாரும் இந்த உண்மை தனை
அறியா நிலையில் தானுள்ளார்
பாரதா இவ்வண்ணம் இருப்பதனால்
பரிதவித்தல் ஏன்? உணர்ந்திடுவாய்

29. ஆன்மாவின் இன்னிலை தனை ஒருவன்
ஆச்சரியம் எனக் காண்கின்றான்

ஆன்மா பற்றிப் பேசுபவன்
ஆச்சரியம் இது என்கின்றான்
ஆச்சரியம் என இவ்வுண்மைதனை
அடுத்தொருவன் நின்று கேட்கின்றான்
ஆனாலும் எவனும் அறியவில்லை

30. அத்தனை உடல்களில் உறைந்திருக்கும்
ஆன்மா அழிவினை அடைவதில்லை
இத்தகை உண்மை நீ அறிந்தால்
எவ்வுயிர்க்கும் வருந்திடத் தேவையில்லை

31. உந்தனுக்குரிய அற நெறியை
உள்ளத்தில் கொண்டு பார்த்திடினோ
இந்தக் களத்தினில் பின் வாங்கும்
இச் செய்கை உனக்கு ஏற்றதில்லை
அறம் தவறாத போர் என்றும்
அரச குலத்தின் சிறந்த நெறி
பிறிதொரு தருமம் அரசகுலம்
பெரிதெனக் கொண்டிட மாட்டாது

32. தற்செயலாக வாய்த்ததுவாய்
திறந்த கதவுகள் கொண்டதுவாய்
அற்புத சுவர்க்கம் தனை நிகர்த்த
அமர் களம் பேறுள வீரர் அடைந்திடுவார்

33. தருமம் தவறாப் போரிதனைத்
தான் செய்யாது நீ விடுத்தால்
அற நெறி தவறிய பாவமதை
அடைவாய் புகழும் இழந்திடுவாய்

34. அழியாப் பழியை உன் மீது
அவனியில் உள்ளோர் சுமத்திடுவார்
பழிச்சொல் சாவினும் கொடியதன்றோ
புகழ் மிகு வீரர் வாழ்வினிலே

35. பயந்து போரில் புறங்கண்டாய் எனப்
பெருந்தேராளிகள் கருதிடுவார்
உயர்ந்த நிலையில் உனை மதித்தோர்
உதவாதவன் என்றே எண்ணிடுவார்

36. எதிரிகள் உந்தன் வலிமை தனை
இகழ்ந்தே, சொல்லவும் ஒண்ணாத
விதம் தனில் பேசுவர். இதனை விட
வருத்தம் தந்திடும் செயல் உளதோ?

37. போரில் இறந்தால் வீர சுவர்க்கம்
பெறுவாய் வெற்றி அடைந்திடிலோ
சீரிய அரசு அடைவாய் குந்தியின்
செல்வா! வீரப்போர் புரிவாய்

38. இன்பம், துன்பம், இலாபம், இழப்பு
இன்னும் வெற்றி தோல்வி தமையும்
ஒன்றெனக் கருதியே போர் புந்திடிலோ
ஒரு பொழுதும் பாவம் அணுகாது

39, 40, 41

நன்னெறி யோகம் கடைப்பிடித்தே
நீஉன் கருமத்தளை அறுப்பாய்
இன்னெறி முயற்சியால் பயன் இல்லை
என்னும் நிலை என்றும் வாராது
எதிரிடைப் பலன்கள் ஏதும் இல்லா
இன்னெறி கருமத்தளை யறுக்கும்
விதிப்படி சிறிதே பயின்றாலும்
வருத்தம் பெரும் பயம் விலகிவிடும்

ஒரு நிலை பெற்ற புத்தியுடன
உறுதியுடன் ஓர் குறி நோக்கி
இருக்கும் யோக நெறி இதுவே
இன்னிலை யறியா மானிடர்கள்
எந்த முடிவென்று தானறியார்
இவர்களின் புத்தி கிளை விரித்தே
அந்தமில்லாததாய்த் திரிந்தலையும்
அறிவாய் குருகுலத்தூமணியே

42, 43, 44

சுவர்க்கம் முதலாம் பயன்கள் தம்மைச்
சொல்லும் மறைமொழி தனில் மற்றும்
உவகை தருவதில் சுவர்க்கம் அன்றி
ஒன்றுமிலை இறுதிப்பயன் அதுவென்றும்
ஆசையே உருவம் ஆன அறிவிலார்
அவனியில் மீண்டும் பிறவி அளிப்பதும்
காசும் இன்பமும் பெறும் வழி காட்டிடும்
கருமத்தின் பற்பல பயன்கள் தருவதும்
ஆனதாம் நெறிதனைப் போற்றியே நம்மிடம்
அழகும் மென்மையும் நிறைந்திடும் மலரெனத்
தானவர் பேசிடும் மொழிகளில் மயங்கிடில்
திடமிகு நிச்சயப் புத்தியை அடைந்திடார்

45, 46 மறைகள் கூறிடும் முக்குணம் தன்னை நீ
மாண்புடன் வென்றிடு இரட்டைகள் நீக்கியே
குறைவிலா சத்துவ குணம் தனில் நிலைத்து நீ
கொள்வதும் கொண்டதைக் காப்பதும் விடுத்திடு
ஆன்மா தன்னையே தேடிடு அருச்சுனா
ஆழமான நீர் நிலை தன்னை அடைபவன்
தான் விரும்பிடும் நீரினை மட்டும்
தனக்கெனக் கொள்ளுவான் அவ்வணம் வீடெனும்
பேற்றினைப் பெற்றிட நான்மறை தெளிவுறச்
சாற்றிடும் மொழிகளை மட்டுமே சாதகன்

ஏற்றிட வேண்டும் என்பதை அறிந்திடு
என்றுரைத்தே கண்ணன் மேலும் பேசுவான்

47. கருமங்கள் புரிவதும் ஆளுகைக்குள்ளே
வருகின்ற பலன்கள் உன் வசத்தினில் இல்லை
வரும் பயன் கருதாது கருமங்கள் புரிந்திடு
வேண்டிலன் கருமங்கள் எனும் எண்ணமும் விட்டிடு

48. பற்றுகள் விட்டு யோகம் தனில் நிலை
பெற்றவன் ஆகி வெற்றி தோல்வியில்
சற்றும் மயங்காது சமமெனக்கருதி
செய்திடு கருமம். அச்சம நிலை யோகம்

49, 50 புத்தியோகத்துடனே நீ புரிம் செயலே பெரிதாகும்
பயனுக்காகச் செயல்கள் புரிபவர் உலோபியர் எனப்படுவர்
புத்தியோகம் கூடியவன் புண்ணியம் பாபம்
துறந்திடுவான்
உத்தம யோக நெறிதனிலே உள்ள முயற்சிகள் நீ
புரிவாய்

51. கருமம் தரும் பயனை எல்லாம் துறந்தே நிற்கும்
ஞானியர்கள்
பிறவித்தளைகள் தமை நீக்கி துயரமிலாத பதம்
பெறுவர்

52. எந்தப் பொழுதில் உன்புத்தி மோஹ அழுக்கைக்
கடந்திடுமோ
அந்தப் பொழுதில் கேட்டது கேட்க வேண்டியது
என்னும் இரண்டு விருப்பங்கள் இல்லாதெனும்
நிலை வந்து விடும்

53. பல பல பொருள்களைக் கேட்டதனால்
கலங்கியிருக்கும் உன் அறிவு
நிலை பெற்று ஆன்மாவில் அசையாது
நிற்கையில் யோகம் தனை அடைவாய்

அர்ச்சுனன் கூறியது:

54. ஞானம் நிலைத்துத் தனை மறந்து
மோனச் சமாதி தனில் நிற்போன்
தானந்த ஞானியாம் ஸ்திதப்ரக்ஞன்
தன்மை உரைப்பாய் கேசவனே

எப்படி அமர்வான் என்பதையும்
எப்படி உரைப்பான் என்பதையும்
எப்படி நடப்பான் என்பதையும்
என்னிடம் சொல்வாய் என் தேவா

ஸ்ரீ பகவான் கூறியது:

55. மனதில் எழுகின்ற ஆசையெல்லாம்
தனக்கிலை யென்று தள்ளுபவன்
ஆன்மாவிடத்தில் ஆன்மாவால்

அகத்துள் மகிழ்ச்சி அடைகிறவன்
எவனோ அவனே ஸ்திதப்ரக்ஞன்
என்னும் பெயர் தனைப் பெற்றிடுவான்

56, 57 துன்பத்தில் துடித்திடா மனத்துடனும்
இன்பத்தில் ஆசை இலா நிலையும்
தன் மனத்தில் அச்சம் கோபம் இன்றி
தானெந்தப் பொருளிலும் விருப்பம் இன்றி
ஞானம் நிலை பெற்ற மனிதனே முனிவன்
அன்பினை மிகுதியாய் எப்பொருள் மீதும்
அவன் கொளான் அதன்தன் நன்மை தீமையால்
இன்பமும் துன்பமும் என்றுமே பெற்றிடான்
ஈடிலா ஞானம் தனில் நிலை நிற்பவன்

58. அவயவங்கள் அனைத்தையும் தன்னுள்
அடக்கும் ஆமைபோல் பொருள்களை விட்டு
அத்தனை பொறிகளை இழுக்கும் வல்லவன்
அவன் நிறை ஞானம் நிலை பெறும் தன்மையாம்

59. புலன்களைப் பொறிகள் அணுகாது தடுப்பவன்
உலகவிஷய சுகங்களை விடுக்கிறான்
அலகிலாப் பெருமை கொள் பரமனைக் கண்டபின்
எஞ்சிடும் ஆசையும் அற்றவன் ஆகிறான்

60, 61 முயற்சியால், நல்ல அறிவில் சிறந்தோன்
மனத்தையும் புலன்கள் வலுவில் இழுத்திடும்

உயர் பொருள் எனவே என்னை நினைத்து
ஓடுக்கிப் புலன்களை அடக்கி அமைதியாய்
இருப்பவனே நிலை பெற்ற மனத்தினன்
இவன் புலன் தன் வசம் எனவே கொண்டதால்
உறுதியை உடையது இவனது ஞானமே
உணர்ந்திடு இதனை நீ குந்தியின் மைந்தனே

62. பொருள்களைப் பற்றியே இடைவிடாதெண்ணுவோன்
பொருள்களில் பற்றினைக் கொண்டவன் ஆகிறான்
பொருள்களில் பற்றினால் ஆசையே தோன்றிடும்
வருகின்ற ஆசையால் சினமதே விளைந்திடும்

63. சினத்தினால் மனதினில் விளை பெருமோஹமே
சேரும் அம்மோஹம் நல் நினைவினைக் கெடுத்திடும்
நினைவு தான் கெடுவதால் புத்தியின் நாசமே
தனை அவன் அடைவதால் முற்றிலும் அழிகிறான்

64, 65 தன்னுடை வசத்தினில் உள்ளதாய் இருப்பதும்
தனக்கென விருப்பும் வெறுப்பும் மற்றதாய்
நன்னயத்தோடு தான் இருந்திடும் புலன்களால்
தன்னடக்கம்தனைக் கொண்டவன் பொருள்களை
அனுபவித்துளத்தினில் தெளிவினை அடைகிறான்
அகத்தினில் தெளிவினால் துன்பங்கள் அழிநதிடும்
அமைதியால் அறிவாத்ம ஸ்வரூபத்தில் நிலை பெறும்

66. அடங்கா மனத்தினன் ஆத்ம போதம் தனை
அடைகிலான் ஆத்ம பாவனை பெறுகிலான்
ஆத்ம தியானமும் இலாதவன் சாந்தியை
அடைகிலான் இன்பம் அடைவது எங்ஙனம்?

67. இமைப் பொழுதும் நிலை நில்லாதலைந்திடும்
இந்திரியங்கள் பின் சென்றிடும் மனம் இவன்
புத்தியைக் காற்று படகைக் கடத்துதல்
போலே கவர்ந்து சென்றிடும் அறிவாய்

68, 69 பொருள்களை நுகர்வதில் புலன்களை அடக்கிடும்
திறன் மிகு மனிதனின் ஞானமே சிறந்தது
இரவென உயிர்களுக்கிருந்திடும் வேளையில்
உறங்குதல் விடுத்து மனம் அடக்கினோன் விழிக்கிறான்
பிற உயிர் பகலெனக் கொண்டிடும் நேரமே
அறிவுள முனிவன் இரவெனக் கொள்கிறான்

70. நிலை குலையாது முழுதும் நிரம்பிய
அலை கடல் அடைந்திடும் நதிகள் போலவே
ஆசைகள் எந்த முனிவன் பால் அடங்குமோ
அவனே அமைதி பெறும் நிலை அடைகிறான்
ஆசைகளை எவன் தொடருகின்றானோ
அவனுக்கு அமைதி என்றுமே இல்லை

71. எல்லா ஆசைகள் விடுத்துப் பற்றுகள்
இல்லை என்றிடும் நிலை தனை எய்திய

நல்லவன் நான் எனது என்பதும் இலனாய்

நடப்பவனே அமைதி நிலை தனை அடைவான்

72. பாண்டவா! பிரமம் தன்னுடன் ஒன்றாய்ப்

பிணைந்துள ஒருவன் மோஹ நிலைதனில் அழுந்தான்

மாண்டிடும் நேரம் தனிலும் இம்மனமுளான்

மாண்புறு பிரம நிர்வாண நிலை அடைந்திடுகிறான்

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோகசாஸ்திரமாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் ஸம்பாஷணை யாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில் ஸாங்கிய யோகம் என்று பெயர் பெற்ற இரண்டாவது அத்தியாயம் முற்றும்.



# ஸ்ரீமத் பகவத் கீதை

## மூன்றாவது அத்தியாயம்

## கர்ம யோகம்

அருச்சுனன் கூறியது:

1. கருமத்தைக் காட்டிலும் ஞானம் தான்
பெரிதெனும் எண்ணம் நீ கொண்டிருந்தால்
பரமா எனை நீ இக்கொடிய
கருமத்தில் ஏனோ ஏவுகின்றாய்?

2. சொல்லால் என் மனம் குழம்ப வைத்துச்
சிந்தையை மயக்குவான் போலுள்ளாய்
நல்லதாம் உயர் நலம் எனக்களிக்கும்
நெறிதனை நிச்சயித்தே உரைப்பாய்

பகவான் கூறியது:

3. ஸாங்கியற்கே ஞான யோக மென்றும்
ஞானியர்க்குக் கரும யோக மென்றும்
பாங்குற முன்னொரு காலத்தில் நான்
பகர்ந்துளேன் பாவம் அற்றவனே

4. கருமம் தொடங்காக் காரணத்தால்
கருமத்தினின்றும் விடுபட்ட

அரிய நிலை புருஷன் அடைவதில்லை
கருமம் தனையே ஒழித்ததனால்
அரிதாம் சித்தி பெறுவதில்லை

5. அறியாதியற்கைக் குணங்களினால்
அவரவர் தொழிலில் இயங்குகிறார்
இரு நிலம் தன்னில் ஒரு கணமும்
கருமம் விட்டெவரும் இருப்பதில்லை

6. கருமப்புலன்களை அடக்கிடினும் அவை
கருதும் பொருள்களை நினைத்தபடி
இருப்பவன் அறிவிலி, பொய்யொழுக்கம்
தரித்தவன் எனும் பெயர் தனைப் பெறுவான்

7. புலன்களை மனதால் அடக்கி வைத்துப்
பற்றுகள் அனைத்தும் எற்றிவிட்டு
நலம்புரி கரும யோகமதை
நாளும் தொடங்குவோன் உயர்ந்தவனே

8. கருமம் புரியாது இருப்பதினும்
சிறந்தது கருமம் செய்நெறியே
உரிய தொழில் நீ புரியாது
இருப்பின் உடல் செயல் திறன் இழக்கும்

9, 10 உனக்குள தொழிலை நீ புரிவாய்
உயரிய வேள்விக்குரிய செயல்

தனை விடுத்தேனைய கரும மெலாம்
தாரணி பந்தம் தனைத்தருமே
வேள்விக்குரிய செயல் தனைப்பற்று
விடுத்தே அர்ச்சுனா புரிந்திடுவாய்
வேள்விகள், மனிதர் தமைப் படைத்த
வேதன் கூறிய மொழி கேட்பாய்
கோரும் பயன்கள் தமையளிக்கும்
காமதேனுவாய்த் தானிருக்கும்
சீரிய வேள்விகள் வளங்களெல்லாம்
வாரியளித்திடும் அறிந்திடுவீர்

11. தேவர்களை நீர் போற்றிடுவீர்
தேவர் உங்களை வளர்த்திடட்டும்
ஆவலுடன் பரஸ்பரம் பேணுவதால்
அளவிலா நன்மை அடைந்திடுவீர்

12. ஆவலுடன் செய்த வேள்விகளால்
தேவர்கள் நீங்கள் வேண்டுகின்ற
பூவிலுள்ள இன்பப் பொருளெல்லாம்
பரிவுடன் உங்களுக்கு அளித்திடுவார்
விண்ணுள தேவர்கள் தந்தவற்றை
விரும்பிப் பெற்றும் கைம்மாறு
எண்ணிச் செய்யாதனுபவிப்போர்
இவ்வுலகில் திருடர் எனப்படுவர்

13. வேள்விகள் செய்து எஞ்சியதை
விரும்பிடும் நல்லவர் பாவமெல்லாம்
தூளென ஆகும் தமக்கெனவே
சமைப்பவர் பாவத்தை உண்ணுகின்றார்

14. உணவே உயிர்களை உண்டாக்கும்
உணவைத் தருவது மழையாகும்
மழையே வேள்வியின் பயனாகும்
வேள்வியின் பிறப்பிடம் கருமமன்றோ

15. கருமத்தைத் தருவது மறை அறிவாய்
காலத்தால் அழியாப் பரம் பொருள்தான்
மறையைத் தந்தது. பரவிய மறைகள்
நிறைந்தே வேள்வியில் நிலைத்திருக்கும்

16. சுழன்றிடும் இந்தச் சக்கரத்தைப்
பற்றியே செல்லாதிருப்பவன் பாவியாய்
விழலென வாழ்வினை வீணாக்கி
விஷய சுகங்களில் அமிழ்கின்றான்

17. ஆன்மாவில் இன்பமும் மன நிறைவும்
ஆன்மாவில் மகிழ்ச்சியும் அடைபவனே
தான் செய வேண்டிய கருமம் ஏதும்
தான் இல்லா நிலை தனை அடைவான்

18. செய்கையால் அவனுக்குப் பயனில்லை
செய்யாதிருப்பினும் தீதில்லை
வையத்திலுள்ள பொருள்களின் பயன்
வேண்டிடும் தேவை இவர்க்கில்லை

19. செவ்வையாய் உனக்கு உரித்தான
செயல்தனைப் பற்றின்றி செய்திடுவாய்
இவ்விதம் செய்திடும் புருசன்தான்
ஈடிலா உயர் நலம் பெற்றிடுவான்

20. சனகர் முதலாம் பெரியவர்கள்
முக்தியை கருமம் செய்தடைந்தார்கள்
நினைவில் உலக நலன் கருதி
நீ உன் தொழில் செய்தற்குரியவனே

21. பெரியவன் ஒருவன் கடைப்பிடிக்கும்
நெறிகளை மற்றவர் பின் தொடர்வார்
அரியவை என்றவன் நெறி எதுவோ
அவனியோர் அதனைக் கடைப்பிடிப்பார்

22. மூவுலகிலும் என்னால் செயற்குரிய
மேலாம் கருமம் ஏதுமில்லை
தேவை என்று நான் அடைவதற்கோ
யாதுமில்லை, பெறாதது ஏதுமில்லை

23. இருப்பினும் பார்த்தா கருமம்தனை
என்றும் அயர்வின்றிப் புரிகின்றேன்
கருமம் தனை நான் செய விடுத்தால்
காசினியோர் என்னைப் பின் தொடர்வார்

24. கருமங்கள் செய்யாது நானிருந்தால்
கலகங்கள் சாதிக் கலப்புகளும்
பெருகிடும் உலகெலாம் அழிந்துவிடும்
பாருள மக்கள் கேடுறவே
காரணம் நானே என ஆவேன்

25. கருமத்தில் பற்றுள்ள பாமரர்கள்
கருமம் செய்வதைப் போலவே தான்
அறிஞர் பற்றின்றிக் கருமமதை
அவனி நலம் பெறப் புரிந்திடனும்

26. பற்றுடன் கருமம் புரிகின்ற
பாமரன் புத்தியில் கலக்கமதைக்
கற்றவர் செய்திடல் தனை விடுத்து
கருமம் சமபுத்தியுடன் புரிந்து
மற்றவரும் அதில் நாட்டமுற
முயல்வது அறிஞர் தம் கடனே

27. இயற்கையின் குணங்கள் தம்மாலே
இயங்குது பல பல தொழில் வகைகள்

இயங்குவதெல்லாம் தன்னாலென்று
எண்ணுவான் அறிவிலி ஆணவத்தால்

28. சத்துவம் முதலாம் முக்குணங்கள்
செயல்கள் இவற்றின் பிரிவுகளின்
தத்துவம் அறிந்தவன் குணங்கள் குணங்களில்
தான் இயங்குது என்று உணர்ந்தவனாய்
தான் எதிலும் பற்றினை அடைவதில்லை

29. இயற்கையின் குணங்களால் தாம் மயங்கி
இயங்கிடும் செயல்களில் பற்று வைத்து
மயங்கிடும் மாந்தரைக் கற்றவர்கள்
மனம் நிலை கெடும் செயல் தவிர்த்திடணும்

30, 31 ஆசையும் தனதெனும் எண்ணமதும்
அகத்தில் கொதிப்பையும் அகற்றிவிட்டு
நீ செயும் செயல்களை எனக்காக்கி
ஆன்மா நீ எனும் நினைவுடனே
போர் புரிவாய் எந்தன் கொள்கை இதைப்
பொறாமையகற்றி சிரத்தையுடன்
ஆர்வத்துடன் கடைப்பிடிப்போரை
அவர்களின் வினைகள் தொடராது

32. என்னுடை இந்தக் கொள்கைதனை
இகழ்ந்தே தொடராது இருக்கின்ற

அன்னவர் அறிவிலா மூடர்களாய்
அழிவர் பிறவியும் வீணாகும்

33. தன்னுடைய இயற்கைக்கு ஒத்தபடி
தானே ஞானவான் நடந்திடுறான்
மன்னுமிவ்வுலகில் தோன்றியவை
இயற்கை வழியே இயங்கிடுது
இதனைத் தடை செய்து என்ன பயன்?

34. அந்தந்தப் புலன்களின் விஷயங்களில்
ஆசை வெறுப்பு உட்புகுந்து நிற்கும்
எந்தப் பொழுதிலும் நம் எதிரிகளால்
இருக்கும் அவற்றின் வசம் தவிர்ப்போம்

35. பரதர்மம் தனை மிக நன்கு
புரிதலைக் காட்டிலும் நமக்குரிய
நெறியாம் ஸ்வதர்மம் தனைப்புரிதல்
நிச்சயம் நலனைத் தானளிக்கும்
குறைகள் இருப்பினும் நமதுநெறி
கொள்வதில் மரணம் நேர்ந்தாலும்
சிறந்தது அதுவே என உணர்வாய்
பிறர் நெறி பயத்தைத் தானளிக்கும்

அர்ஜுனன் கூறியது:

36. விருப்பம் இல்லாத போதிலுமே
வேறெதன் வலிய ஏவுதலால்

புருஷன் பாவம் புரிகின்றான்
புகல்வாய் விருஷ்ணி குலக்கண்ணா

ஸ்ரீ பகவான் கூறியது:

37. ஆசையும் சினமும் ரஜோ குணத்தால்
ஆவது. கொடிய பாவம் தரும்
நேசமுடன் பெரும் தீனிதனை
வேண்டிடும் பகைவர் இவர் அறிவாய் நீ

38, 39 புகையால் எரியும் தீ மறையும்
கருவை கருப்பை மறைத்திருக்கும்
முகத்தைப் பார்க்கும் கண்ணாடி
அழுக்கால் முகத்தை மறைப்பதுபோல்
நிரப்ப இயலா, போதும் எனாததாய்
இருக்கும் ஆசைத் தீயது ஞானியின்
அரிதாம் ஞானம் தனையே சூழ்ந்து
பகையாய் காம உருவில் மறைக்கும்

40. ஆசையின் இருப்பிடம் புத்தியும் மற்றும்
இந்திரியங்களும் மனமும் ஆகும்
தேசுள ஞானம் தனை இவைமறைத்து
தெளிவிலா மயக்கம் மனிதனுக்களிக்கும்

41. இந்திரியங்களை முதலில் உன்வசமாய்
இருத்தி ஞானம் விஞ்ஞானம் இரண்டையும்

இல்லை யென்றாக்கிடும், பாவத்தின் உருவாய்
இருக்கும் ஆசையை அறவே ஒழித்திடு

42. இந்திரியங்கள் உயர்ந்தவை என்றேகூறுவர்
எனினும் அவற்றினும் மனமே உயர்ந்தது
சிந்தையை விட நம் புத்தியே உயர்ந்தது
புத்தியை விடவும் உயர்ந்தது ஆன்மா

43. புத்திதனை மிஞ்சும் ஆன்மா என்பதைப்
புரிந்து கொள் பெரிய கரங்கள் படைத்தவா

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திர மாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும், அர்ச்சுனனுக்கும் ஸம்பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில் கர்ம யோகம் என்று பெயர் பெற்ற மூன்றாவது அத்தியாயம் முற்றும்.



# ஸ்ரீமத் பகவத் கீதை

## நான்காம் அத்தியாயம்

## ஞான கர்ம ஸந்யாஸ யோகம்

ஸ்ரீ பகவான் கூறியது:

1. அழிவற்ற யோகம் இதனை முன்னமே
அன்புடன் கதிரவன் தன்னிடம் பகர்ந்தேன்
வழங்கினார் தன் மகன் மனுவிடம் பரிதியும்
மனுவோ இக்ஷ்வாகு மன்னனுக்களித்தனன்

2. தொன்று தொட்டு வந்த நல் யோகம்
தனை இராஜ ரிஷிகள் நன்கறிந்தனர்
சென்றது காலம் அதனால் அதுவும்
இன்றிலை என்ற நிலையை அடைந்தது

3. நண்பனாய் பக்தனாய் எனக்கு நீ இருப்பதால்
நான் அந்தப் பழமையாம் யோகம் புகன்றேன்
உண்மையில் இப்பொருள் உத்தமம் ஆனதும்
உயர்ந்ததாய் உள்ளதோர் மறைபொருள் உணர்ந்திடு

அர்ச்சுனன் கூறியது:

4. முன்பே தோன்றிய கதிரவன் தன்னிடம்
பின்பு தோன்றிய நீ இதைப் பகர்ந்ததாய்

இன்று நீ உரைப்பதை எப்படி ஏற்பது?
என்பதை அறிகிலேன் இதற்கு நீ விடையருள்

ஸ்ரீ பகவான் கூறியது:

5. நானிலம் தனிலே எத்தனை பிறவிகள்
நானும் நீயும் எடுத்துளோம் ஆயினும்
நானவை அனைத்தையும் அறிந்தவன் இருப்பினும்
நீயிவை ஒன்றையும் அறிந்திலை அர்ச்சுனா

6. பிறப்பிலன் இறப்பிலன் மாறுபாடிலாத நான்
பலபல உயிர்க்கெலாம் ஈசனாய் இருப்பினும்
இறைவனாய் விளங்கிடும் என்னுடை இயற்கையை
என் வசம் ஆக்கி என் மாயையால் தோன்றுவேன்

7. பாரதா என்று இப்பாரினில் நல்லறம்
பழுதினை உற்றுமே தீயறம் ஓங்கிடின்
ஆர்வமோ டென்னையே அன்று நான் படைக்கிறேன்
அவனியில் தோன்றி நல்லறம் தன்னைக் காத்திட

8. நல்லவர் தம்மையே காத்திடும் பணி செய
புல்லரை ஒழித்து இப்புவி தனில் நல்லறம்
வல்லமை கொண்டு தான் நிலை பெறச் செய்யவும்
வந்து நான் யுகந் தொறும் மண்மிசை தோன்றுவேன்

9. இப்படித் திகழும் என் பிறப்பையும் செயலையும்
எவன் ஒருவன் நன்கு அறிவனோ அன்னவன்

இப்புவி தனை விட்டு மறைகையில் மீளவும்
இங்கவன் பிறந்திடான் என்னை வந்தடைகிறான்

10. ஆசையும் கோபமும் பயமும் அற்றவர்
அன்புடன் என் மயம் ஆகியே சரண்என
தேசுடை ஞானத்தவத்தால் புனிதராய்
தானவர் எந்தன் தன்மையை அடைந்துளார்

11. எவ்விதம் என்னையே நாடுகின்றார்களோ
அவ்விதம் அவர்களுக்கு அருள்தனைப் புரிகிறேன்
எவ்வகை தன்னிலும் என்வழி பற்றியே
எல்லா மாந்தரும் நடக்கிறார் பார்த்தனே

12. செயல்களின் பயன்கள் கை கூடுதல் நாடியே
சிந்தையில் மாந்தர்கள் தேவரைத் துதிக்கிறார்
செயல்களால் மானிட உலகினில் சித்திகள்
சீக்கிரம் அடைவதை நித்தமும் காண்கிறோம்

13. குணங்களுக் கொத்ததாய் கருமங்கள் தமை
வகுத்தே நான்கு வருணங்கள் படைத்தேன்
உணர்ந்திடு. படைத்தவன் நானென்றிருப்பினும்
உண்மையில் கர்த்தா நான் இலை என்பதை

14. செயல்கள் என்னைப் பற்றிடாதென்பதும்
பயன்களில் பிரியம் எனக்கிலை என்பதும்

நயமிகு உண்மை இதனையும் எனையும்
நன்கறிந்தவனை செயல் கட்டுவதில்லையே

15. முக்தியை அடைந்திட முனைந்த நம் முன்னவர்
முழுதும் இவ்வுண்மையை உணர்ந்தே செயல்களை
முடித்தனர் எனவே செயல்களை நீயுமே
முன்னவர் செய்த வண்ணமே செய்திடு

16. தகுந்த செயல்கள் எவை எவை என்பதும்
தகாத கருமம் எவை எவை என்பதும்
உகந்ததறியாது அறிஞரும் திகைக்கிறார்
உனக்கு நான் தீதிலா மருமம் உரைக்கிறேன்

17. செயல்களில் தகுந்த தெவை எவை என்பதும்
செயல்களில் தகாதது எவை எவை என்பதும்
செயல்களின் இன்மையும் அறிந்திடல் அவசியம்
செயல்களின் போக்கினை அறிவது அரியது

18. செயல்கள் புரிகையில் செய்யா நிலையும்
செய்யா நிலையில் செயல்கள் நிகழ்தலும்
இயல்பாய் அறிந்தவன் புத்தியில் மனிதருள்
உயர்ந்தவன், யோகி, செய்வன முடித்தவன்

19. ஆசையும் முனைப்பும் அற்றதாம் செயல்கள்
ஆற்றுவோன் வினை ஞானத்தீயில் பொசுங்கிடும்

மாசிலா அறிஞன் பண்டிதன் என்றவன்
தேசினைப் புகழ்ந்து பேசுவர் அர்ஜுனா

20. செயல்களின் பயன்களில் பற்றினை விட்டவன்
சிந்தையில் நிறைவுடன் மற்றெதனையும் சார்ந்திடா
உயர்குணம் கொண்டவன் கருமத்தில் ஊன்றியும்
ஒன்றுமே செய்யாத நிலைதனை அடைகிறான்

21. ஆசைகளற்றவன் உடலும் உள்ளமும்
அடக்கியே உடைமைகள் துறந்தே வாழ்பவள்
மாசிலா அன்னவன் தன் மேனியைக் காத்திட
மட்டுமே உள்ளதாம் கருமங்கள் புரிபவன்

22. இரட்டைகள் கடந்தவன் பொறாமை இலாதவன்
வெற்றியும் தோல்வியும் சமமெனக் கொள்பவள்
தற்செயலாகக் கிடைப்பதில் மகிழ்பவன்
கருமங்கள் செய்யினும் கட்டுப்படானவன்

23. பற்றுகள் அற்றவன் ஞானம் தனில் நிலை
பெற்றவன் முக்தன் செய்திடும் செயலெல்லாம்
உற்றதாம் வேள்வியின் பொருட்டே செய்ததால்
உருத் தெரியாமலே கரைந்து மறைந்திடும்

24. அர்ப்பணம் என்பதும் பிரமம். அர்ப்பணம்
செய்திடும் பொருளும் பிரமம், தீயினில்
அர்ப்பணம் தனையே செய்தலும் பிரமமே

கருமமாம் பிரமத்தில் மனம் குவிந்தவனே
பிரமம் தனையே பொருளாய் அடைகிறான்

25. ஏனைய யோகியர் தேவருக்குரியதாம்
வேள்விகள் தம்மையே பரிவுடன் புரிகிறார்
இன்னமும் சிலரோ ஆன்மாவெனும் அவி
தன்னையே ஆன்மாவைக் கொண்டே அளிக்கிறார்

26. மற்றவர் 'அடக்குதல்' என்னும் தீயினில்
செவிமுதலான பொறிகளை இடுகிறார்
உற்றதாம் ஓசை முதலிய பொருள் சிலர்
உவந்தே பொறிகளாம் தீயில் இடுகிறார்

27. ஆன்மா தன்னில் ஒடுங்கும் யோக
அக்கினி தன்னிடம் இந்திரியத் தொழில்
மேன்மையாம் பிராணனின் தொழில்கள் தம்மையும்
தான் சிலர் ஆஹுதி தன்னையே செய்கிறார்

28. திரவிய வேள்வி செய்பவர் சிற்சிலர்
தவமெனும் வேள்வி செய்பவர் சிற்சிலர்
யோகமெனும் வேள்வி செய்பவர் சிற்சிலர்
ஓதியே வேதம் உணர்பவர் சிற்சிலர்
இடைவிடா முயற்சி செய்பவர் சிற்சிலர்
கடுந்தவம் செய்பவர் இன்னும் சிற்சிலர்

29, 30 இன்னும் சிலரோ மூச்சுக்காற்றில்

வெளி உள காற்றை ஆஹுதியாக்கி

தன்னுடை மூச்சுக்காற்றை வெளியில்

திரியும் காற்றில் ஹோமம் புரிகிறார்

மூச்சு காற்றின் போக்கு வரத்தினை

முனைந்தே தடுத்து உயிரினை நிறுத்துவார்

யாகம் என்பதை நன்கு உணர்ந்தவர்

யாகத்தால் தம் பாவம் தேய்ந்தவர்

போகமாம் உணவை அளவுடன் உண்பவர்

பிராணவாயுவை பிராண வாயுவில் செலுத்துகிறார்

31. யாகம் செய்து எஞ்சிய அமுதினை

உண்பவர் அழிவிலா பிரமம் அடைகிறார்

யாகமி யற்றா னுக்கிவ்வுலகிலையெனின்

எங்ஙனம் அவ்வுலகினை அவன் அடைவான்

32. வேதத்தின் மூலமாய் விரிந்தன வேள்விகள்

வேதங்கள் கருமத்தில் உதித்தவை என்ற

கோதிலா உண்மையை உணர்ந்து விடுபடு

குருகுலத்திற் சிறந்த வீரர் அருச்சுனா

33. பொருள்நிறை வேள்விகள் தம்மையே மிஞ்சிடும்

புனிதமாம் ஞானவேள்விகள் என்பதை

அறிந்திடு எல்லாச் செயலும் ஞானத்தில்

இறுதியை அடைந்திடும் உணர்ந்திடு பார்த்தனே

34. பணிவுடன் சேவை புரிந்தே பரிவுடன்
வினவிடின் மெய்ப் பொருள் கண்ட ஞானியர்
இணையிலா ஞானம் தன்னையே உனக்கவர்
எடுத்துபதேசமே கனிவுடன் புரிகுவர்

35. இத்தகை ஞானம் அடைந்த பின் பாண்டவா
இன்றுள மோஹம் மீண்டும் அடைந்திடாய்
இத்தரை தனில் உள அத்தனை உயிரையும்
என்னிலும் உன்னிலும் நிச்சயம் காணுவாய்

36. பாவிகள் தம்முளே கொடியவன் ஆயினும்
பாவம் அனைத்தையும் கடந்திட உதவிட
மேவிடம் தெப்பமாய் ஞானமே திகழ்ந்திடும்
மேன்மையை அறிந்திடு பாண்டவச் செல்வனே

37. கொழுந்து விட்டெரிந்திடும் அக்கினி விறகினை
கொஞ்சமும் மிஞ்சிடாதெரித்து நீறாக்கிடும்
வழுவிலாதவ்வணம் கருமங்கள் சாம்பலாய்
விரைவினில் ஞானத்தீ எரித்திடும் அருச்சுனா

38. தூயதாய் ஆக்கிடும் பணியினால் ஞானம்
தன்னையே நிகர்த்தது வேறெதும் இல்லையே.
நேயனே யோக சித்தி நாளடைவில்
பெற்றவன் ஞானம் தன்னிடம் பெறுகிறான்

39. அதனையே மேலெனக் கருத்தில் கொண்டவன்
அத்தனை பொறிபுலன் அடக்கியே சிரத்தை
நிதமும் பொருந்தியே வாழ்பவன் விரைவினில்
ஞானமும் மேலாம் சாந்தியும் அடைகிறான்

40. ஞானமும் சிரத்தையும் இலாது வாழ்பவன்
எதனையும் நம்பிடா இயல்பு படைத்தவன்
தானவன் எந்த உலகமும் இன்பமும்
தனக்கிலை எனும் நிலை அடைந்தே அழிகிறான்

41. யோகம் துணை கொண்டு கருமங்கள் விட்டவன்
ஞானம் துணை கொண்டு ஐயங்கள் தீர்த்தவன்
தேகம் மறந்தான்மா தன்னில் திளைத்தவன்
தனைச் செயல்கள் கட்டிடா தென்றுமே தனஞ்ஜயா

42. ஞானமிலாத நிலையில் தோன்றியே
உள்ளம் தனில் உறைந்தே நின்றிடும்
ஆன்மா பற்றிய ஐயம் தனையே
ஞானமெனும் வாள் கொண்டே வெட்டி
யோகம் கைக்கொண்டு எழுந்திடு பாரதா

இங்ஙனம் பிரம்ம வித்தையாவும் யோக சாஸ்திரமாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் ஸம்பாஷணையாய் விளங்கும் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷதத்தில் ஞான கர்ம ஸன்யாஸ யோகம் என்று பெயர் பெற்ற நான்காவது அத்தியாயம் முற்றும்.

# ஸ்ரீமத் பகவத் கீதை

## ஐந்தாவது அத்தியாயம்

## ஸந்யாஸ யோகம்

அர்ஜுனன் கூறியது:

1. கருமம் தனையே கை விடுதலையும்
கருமம் தனையே கை கொளும் நிலையும்
இரண்டையும் ஏற்றிப் பேசும் கண்ணா
சிறந்தது எதுவெனத் துணிந்து சொல்லுவாய்

ஸ்ரீ பகவான் கூறியது:

2. கருமத்தை விடுதலும் கொள்ளுதலும்
இரண்டும் உயர்நலம் தருமெனினும்
கருமம் தனைக்கை கொள்ளுவதே
இரண்டில் சிறந்தது என்றுரைப்பேன்

3. விருப்பு வெறுப்பு இலாதவன் என்றும்
துறவி என்றறிதற் குரியவனாவான்
இரட்டைகள் விட்டவன் தன்னை கருமக்
கட்டுகள் எளிதில் விட்டு விடும்

4. அறியாச் சிறுவர் ஸாங்கியமும் யோகமும்
இரண்டும் வெவ்வேறென்றே உரைப்பர்

குறைவறக் கற்றவர் இவ்வனம் கூறார்
ஒன்றில் நிலையுளார் இருபயன் பெறுவரே

5. என்னிலை ஸாங்கியர் அடைகின்றார்
அன்னிலை யோகியர் தாமடைவர்
ஒன்றென ஸாங்க்யமும் யோகம்தனையும்
கண்டவன் உண்மையைக் கண்டவனாகும்

6. பெருந்தோள் படைத்தோய், துறவு நிலை
பெறுவதரிது யோகம் துணை இன்றேல்
அரிதாம் யோகம் கூடிய முனிவன்
விரைவில் பிரமம் தனை அடைவான்

7. யோகம் தன்னைக் கூடியவன்
உள்ளத்தூய்மை தனை அடைந்தோன்
தேகத்தின் பொறிபுலன் அத்தனையும்
திறமை யோடடக்கி வெற்றி கொண்டோன்
பூவுலகில் உயிர் அனைத்திலுமே
தன்னைக் காண்பான் அவன் கருமம்
புனிதன் அவனைப் பற்றாது
என்பதனை நீ அறிந்திடுவாய்

8, 9 பார்க்கினும் கேட்கினும் தீண்டினும் முகரினும்
பிடிக்கினும் விடுக்கினும் கண்திறக்கினும் மூடினும்
– பசி

தீர்க்கவே உண்கினும் நடக்கினும் உறங்கினும்
மூச்சை இழுத்து விடுவதைச் செய்கினும்
பொறிகளும் புலன்களும் விஷயத்தியங்குதல்
அறிந்த தத்துவயோகி தன் செயல் இலை எனும்
உறுதியைத் தன் மனம் கொண்டே திகழுவான்

10. பண்ணும் கருமங்கள் அனைத்தையுமே
பிரமம் தனையே சார்ந்ததுவாய்
எண்ணிய பற்றின்றிப் புரிபவனைக் – கமல
இலை நீர் எனப்பாவம் பற்றாது

11. தான் எனும் எண்ணம் பற்றுமின்றித்
தூய நிலை தன் உளம் பெறவே
மனது புத்தி புலன் உடலால்
யோகியர் கருமம் புரிகின்றார்

12. யோகம் தன்னைக் கூடியவன்
உள்ள செயல்களின் பயன் விட்டு
உயரிய நிட்டையில் அமைதிதனை
உள்ளம் தன்னில் அடைகின்றான்
யோகம் தனைக் கூடாதவனோ
ஆசையின் தூண்டுதல் விளைவாக
மோஹம் பயனில் கொண்டவனாய்
மீளாக்கட்டில் உழல்கின்றான்

13. இந்திரியங்களைத் தன் வசமாக்கி
இருக்கும் புருஷன் தன் மனத்தால்
வந்திடும் கருமமெலாம் துறந்து
வாயில்கள் ஒன்பது கொண்ட நகர்
தன்னில்தான் ஏதும் செய்யாமல்
செய்விக்காமலும் வாழ்கின்றான்

14. வினைகள் செய்கிறோம் எனும் உணர்வும்
வினைகளும் அவை தரும் பயன்களையும்
தனிப்பெரும் தெய்வம் படைக்கவில்லை
தானே இயற்கை படைத்திடுதே

15. எவனுடை புண்ணிய பாவமதும்
இறைவன் ஏற்றுக் கொள்வதில்லை
அவனவன் ஞானத்தை அறியாமை
மறைப்பதால் மோஹம் சூழ்கிறது

16. ஆன்ம அறிவுப் பேரொளியால்
அறியாமை அழியப் பெற்றவர்கள்
பானுவைப் போல் வந்து பரம் பொருளை
ஆன்ம ஞானம் விளக்கக் கண்டிடுவார்

17. அதனில் புத்தி உடையவராய்
அதையே ஆன்மாவெனக் கொண்டு
அதனில் நிலை பெற்றுப் புகலெனவே
அதனை அடைந்தவர் பாவங்கள்

அனைத்தும் அகன்று பிறவிதனை
அடைவதிலை எனும் நிலை பெறுவர்

18. கல்வியும் அடக்கமும் நிறைந்த அந்தணர்
காக்கும் நாய் பசு யானை தன்னையும்
கொல் தொழில் புரிந்து நாயுண்ணும் ஒரு
புலையனும் ஒன்றெனக் காண்பர் ஞானியர்

19. எவர் மனம் சமநிலை தன்னில் உள்ளதோ
இம்மையில் பிறவியை வென்றவர் அவரே
தவறும் குறையிலா சமநிலை கொண்டதாம்
தனிப்பெரும் பிரமம் அதனால் அவர்களும்
தாம் அதனிடம் நிலைத்திடும் தகைமை பெறுகிறார்

20. பிரமத்தை அறிந்ததன் நிலை நிற்போன்
உறுதி மிகுந்த புத்தி கொண்டோன்
சிறிதும் மனதில் குழப்பமிலாதவன்
விரும்பியதடைந்தால் பெருமகிழ்ச்சியும்
விரும்பாதது வரின் மனத்துயரமும்
இரண்டும் இல்லாது தானவன் இருப்பான்

21. புறப் பொருள்கள் மேல் பற்றின்றி
புனித ஆன்மா தரும் சுகம் பெற்று
பிரமத்துடன் நிற்கும் அந்தக் கரணமுளான்
இறுதியில்லாச் சுகம் அனுபவிப்பான்

22. குந்தியின் மைந்தா புறப் பொருள்கள்
முதலும் இறுதியும் உள்ளவைகள்
கூடலால் விளைந்த இன்பமெலாம்
எந்தப் பொழுதிலும் துன்பம் தரும்
இதை அறிந்தறிஞன் இன்பமுற்றிடான்

23. ஆசையும் கோபமும் தரும் விளைவைத்தன்
ஆருயிர் நீங்கிடும் முன்புஉலகினில்
மாசிலா யோகி சுக புருஷன்
மனதில் தாங்கிடும் வலிமை கொள்ளுவான்

24. தன்னுளே சுகம்தனைத் துய்த்திடுவான்
தன்னுளே தான் விளையாடிடுவான்
தன்னுளே உள்ளொளி கண்டிடுவான்
தானந்த யோகி வாழ்கையிலே
தானே பிரமமாய் முக்தி தனையடைவான்

25. தீ வினைகள் அனைத்தையும் களைந்தவராய்
தோன்றிய ஐயங்கள் அகன்றவராய்
பூவுலகுயிர்கள் நலம் பேணிப்
புனித உள்ளம் மகிழ்பவராய்
இந்திரியங்கள் தமை வென்ற
இருடிகள் பிரமத்தில் லயித்திடுவார்

26. காமமும் கோபமும் விட்டவர்கள்
ஆன்ம தரிசனம் பெற்றவர்கள்

மாமத மனம் தனை அடக்கிவிட்ட
மாதவர் முக்தி தனை அடைவர்

27, 28 புறப் பொருள்கள் தமை வெளி நிறுத்தி
புருவங்களிடையில் விழி வைத்து
பிராண அபானம் சமப்படுத்தி
புத்தி பொறி புலன் தமையடக்கி
ஆசை அச்சம் சினம் விடுத்து
முக்தியை நாடுவோன் என்றும் முக்தன்

29. வேள்வியும் தவமும் அனுபவிப்போன்
வாரிதி சூழ் அனைத்துலகீசன்
நீள்புவி உயிர்களின்நேசன்
நான் என அறிந்தோன் சாந்தி அடைவானே

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தின் ஸன்யாஸ யோகம் என்று பெயர் பெற்ற ஐந்தாவது அத்திாயம் முற்றும்.



# ஸ்ரீமத் பகவத் கீதை

### ஆறாவது அத்தியாயம்

## தியான யோகம்

ஸ்ரீ பகவான் கூறியது:

1. கருமத்தின் பயனைச் சாராது
கருமம் புரிபவன் உயர் துறவி
சிறந்த யோகியும் அவனேதான்
நெருப்பும் கருமமும் துறந்திலனாம்

2. துறவறம் என்றெதை உரைத்தனரோ
யோகமும் அதுவென்று அறிந்து கொள்வாய்
உறையும் எண்ணமாம் சங்கல்பம்
துறவாதவன் யோகி ஆவதில்லை

3. யோகம் தனில் உயர்நிலை அடைய
உதவிடும் சாதனம் கருமமென்பார்
யோகத்தில் உயர்நிலை அடைந்தவர்க்கு
உதவிடும் சாதனம் செயலின்மை

4. இந்திரியங்கள் நாடும் பொருள்களின் பால்
இச்சையில்லாத நிலை பெற்றோன்

பந்தம் செயல்களில் இலாதிருப்போன்
பலபல எண்ணங்கள் தமை விடுத்தோன்
யோகாரூடன் எனும் பெயர் பெறுவான்

5. தன்னைத்தானே உயர்த்திடல் வேண்டும்
தன்னைத்தானே தாழ்த்துதல் தவறு
தானே தனக்கும் உறவினன் ஆவான்
தானே தனக்குப் பகைவனும் ஆவான்

6. தன்னைத்தானே வென்றவன் வாழ்வில்
தனக்குத்தான் உறவினன் ஆவான்
தன்னை வெல்லாதிருப்பவனோ
தனக்கேதான் பகையாகின்றான்

7. வெப்பம், குளிர், இன்ப துன்பங்களில்
விளையும் மான அவமானங்களில்
எப்பொழுதும் அமைதி உளம் கொண்டோன்
என்றும் பரமாத்ம ஞான நிலை நிற்பான்

8. அறிவால் அனுபவத்தால் மனநிறைவை
அடைந்தவன் எதற்கும் அசையாதான்
பொறிகளை வென்றவன் மண்ணையும் கல்லையும்
பொன்னையும் ஒன்றெனக் கருதிடும் யோகி
புவியில் யுக்தன் எனும் பெயர் பெறுவான்

9. நம் மனத்தார், நட்புடையோர், நல்லவர்கள்,
கெட்டவர்கள்,
நமை மதியார், நடு நிலையோர், வெறுப்பவர்கள்,
உறவினர்கள்,
இன்முகத்தோடனைவரையும் ஒரு நிலையில்
சமமெனவே
எண்ணுபவன் சிறந்தவனே என்ற நிலை
பெறுகின்றான்

10. தன்னந்தனியாய் எப்போதும்
தனிமையில் இருந்துடல் உள்ளமதைத்
தானடக்கி ஆசை தனை விடுத்து
தனதெனும் பொருள் இன்றி தியானமதில்
தானே யோகி முயன்றிடனும்

11. தூயதாம் இடத்தில் அசையாத
தாழ்வும் உயர்வும் அதிகமிலா
பாயெனத் தருப்பை மேல் தோல், துணியைப்
பரப்பியே அமரும் இடம் அமைத்து

12. அமர்விடம் அதனில் தான் அமர்ந்து
அகத்தினை ஒரு முனைப்படுத்திவிட்டு
அகம் புலன்கள் தம் செயல் அடக்கி
சித்த சுத்தம் அடைந்திட யோகம் பயின்றிடணும்

13. உடல், தலை, கழுத்து ஓர் நிலையில்
ஒழுங்காய் அசைவின்றி நிறுத்தி வைத்து
திடமுடன் வேறெந்த திசைபாலும்
திரும்பாமல் நாசி நுனி நோக்கி

14. அலையாத மனத்தன் அச்சமிலான்
அனவரதம் பிரமசரிய நிலை நின்றோன்
நிலையாய் எனை நினைத்தெனை என்றும்
இலக்கெனக் கொள்வோன் யுக்தன் அவன்

15. என்றும் ஒரு முகப்படுத்தியதாய்
இப்படித் தன் மனம் அடங்கியதாய்
நின்றிடும் யோகி முக்தியையும்
என்னிடம் லயத்தையும் தானளிக்கும்
சாந்தியை நிச்சயம் அடைந்திடுறான்

16. உணவை அதிகம் உண்பவனும்
ஒன்றும் உண்ணாதிருப்பவனும்
கணக்கின்றி உறக்கம் கொள்பவனும்
கண்விழித்தே தான் இருப்பவனும்
யோகம் தன்னை அடைவதில்லை

17. மிதமாய் உண்டுடற் பயிற்சி செய்வோன்
மிதமாய் கருமங்கள் செய்து, உறக்கம்
மிதமாய் கொண்டு விழிப்பிலும் முறையாய்
இருப்பவன் துன்பம் துடைத்திடும் யோகம்

18. அடங்கிய சித்தம் ஆன்மாவில்
அமிழ்ந்து இருக்கும் பொழுதினிலே
தொடரும் ஆசைகள் தமை அறுத்த
தூயவன் யுக்தன் எனப்படுவான்

19. ஆத்ம தியானம் பழகும் யோகியின்
அடங்கிய சித்தம் காற்றிலா விடத்தில்
ஏற்றி வைத்திடும் தீபம் அசையா
திருப்பதற்குவமை எனவே திகழும்

20, 21, 22, 23 யோகம் பயின்றிடும் காரணத்தால்
உள்ளம் அமைதியுறும் வேளை
ஸோஹம் என்னும் ஆன்மாவால்
ஆன்மாவைக் கண்டு ஆன்மாவில்
சித்தம் மகிழ்வு பெறும் வேளை
பொறிகளுக்கெட்டாது முடிவில்லா
புத்திக்கு மட்டும் எட்டுவதாய்
புலப்படும் யோகியின் சுகமெதுவோ,
எதனில் நிலைத்தபின் ஆன்மாவின்
உருவத்தை விட்டசையா திருப்பானோ,
எதனை அடைந்தபின் வேறெந்த
இலாபமும் பெரிதென நினையானோ,
எதனை நினைத்தபின் பெருந்துயரம்
எதிர் வரினும் அசையாதிருப்பானோ,
அதுவே துக்கத்தின் தொடர்பில்லா

அரிய யோகம் என்றறிந்தனை
அணுவும், தளரா நெஞ்சுடனும்
ஆர்வத்துடன் விடா முயற்சியுடன்
அனுதினம் பயின்றிடற்குரியதென
அறிந்திட வேண்டும் குருகுலத்தோய்

24. சங்கல்பம் தோற்றும் ஆசைகள்
அறவே துறந்த உள்ளத்தால்
பொங்கியே எப்பக்கம் தனிலுள்ள
பொறிகள் குழுவினைத் தானடக்கும்

25. உறுதியோடுள்ள அறிவாலே
சிறிது சிறிதாய் அமைதிதனைப்
பெறுக! ஆன்மாவில் உள் மனமும்
நிலைத்திட வேறொன்றும் நினையாதே

26. அலைவதும் நிலையற்ற இயல்போடுள்ளதும்
ஆனதாம் மனது பல பொருள் நாடி
அலைவதை மாற்றி மனமதை மீட்டு
ஆன்மாவின் வசமென ஆக்கிடல் வேண்டும்

27. மனம் தனை அமைதியில் நிறுத்தியவன்
மதமிகு ரஜோகுணம் அடக்கியவன்
தினையளவும் பாவமிலான் பிரமமாய்த்
தானே ஒன்றிய ஞானி சுகம் பெறுவான்

28. ஆன்மாவில் இவ்வண்ணம் தன் மனதை
அத்தனை நேரமும் நிலைக்க வைப்போன்
தான் பாவம் நீங்கிய யோகி பிரம
ஞானம் தரும் பெரும் சுகம் தனை அடைவான்

29. யோகத்தில் உறுதி பெற்றெங்கும்
உள்ளதைச் சமநோக்குடன் காண்பான்
உலகுயிரனைத்திலும் தனைக்காண்பான்
உலகுயிர்கள் தமைத் தன்னிடம் காண்பான்

30. எல்லாவற்றிலும் எனைக் காண்கின்றான்
என்னிடம் எல்லாவற்றையும் காண்கிறான்
நல்லவன் அவன் பார்வை விட்டு நான் அகலேன்
நாளெலாம் என் பார்வை விட்டவன் அகலான்

31. உலகுயிரனைத்திலும் உறையும் எனையே
ஒன்றான பிரமம் என்றெண்ணித் துதிப்போன்
அலகிலா யோகி எந்நிலையிலிருப்பினும்
அவன் என்னிடத்திருப்பவன் என்றே ஆகிறான்

32. மன்னுயிர் தன்னுயிர் என்றே எண்ணி
மற்றவர் இன்பமும் துன்பமும் தனதென
ஒன்றாய்க் காணும் உள்ளம் படைத்தோன்
உயர்ந்த ஓர் யோகி என்றறிவாய் அர்ச்சுனா.

அர்ச்சுனன் கூறியது:

33. அனைத்தையும் சமமெனக் காணும் யோகம்
அண்ணலே மதுசூதனா! புகட்டினாய்
மனது சஞ்சலம் கொண்டவன் ஆதலால்
நிலைத்துள யோகம் என்று நான் உணர்கிலேன்

34. அலையும் தன்மையும் வலிவும் திடமும்
அடுத்தவர் திகைத்திடச் செய்திடும் குணமும்
பலமும் அடங்கா இயல்பும் கொண்ட
நிலையிலா மனம் காற்றென அடக்குதல் அரிது

ஸ்ரீபகவான் கூறியது:

35. அலைந்தே திரிவது மனம் என்பதுவும்
அடக்க முடியாத குணமுள தென்பதும்
நிலை பெற்ற உண்மை எனினும் அதனை
நிச்சயம் பயிற்சி வைராக்கியத்தால் அடக்கலாம்

36. உள்ளம் அடங்காதிருப்பவன் என்றும்
உயரிய யோகம் அடைவது அரிது
உள்ளம் அடக்கியோன் முயற்சியும் தக்க
உபாயமும் கைக் கொண்டதனை அடைவான்

அர்ஜுனன் கூறியது:

37. நம்பிக்கையுள்ளவன் ஆனாலும்
நல்லதாம் முயற்சிக் குறைவாலே
தன் பிழையால் யோகம் அடை யாதான்
தான் அடையும் கதி என்ன கண்ணா?

38. பிரம நெறியினில் விருப்பம் கொண்டவன்
பற்றுக் கோடின்றியே இகம் பரம் என்னும்
இரண்டிலும் வழுவிச் சிதறும் மேகமாய்
இல்லாது அழிவான் அலவோ கண்ணனே

39. ஐயம் இதனை முற்றிலுமே
அழிக்கத் தகுந்தவன் நீயன்றோ?
ஐயா உமையன்றி இவ்வையம்
அழிக்கும் திறனுளோன் எவருமிலை

ஸ்ரீ பகவான் கூறியது:

40. இம்மை மறுமை இரண்டிலும் அழிவு
இல்லை அவனுக்கு உணர்ந்திடு பார்த்தா
உண்மை. நற்செயல் புரிவோன் நிச்சயம்
ஒரு பொழுதும் தீங்கினை அடைவது இல்லை

41. யோகம் தன்னில் வழுவிய மனிதன்
உயரிய புண்ணியர் உலகம் அடைந்து
போகத்துடன் நெடுநாள் அதில் வாழ்ந்து
புனிதச் செல்வர் வீட்டினில் பிறப்பான்

42. இலையேல் அருள்மிகு யோகியர் குலத்தில்
இவன் பிறப்பான் இவ்வுலகம் தனிலே
நலமிகு இத்தகு பிறவி தனைப் போல்
நிச்சயம் பெறுவது மிகமிக அரிது

43. சென்ற பிறப்பினை அடைந்ததாம் யோக
சாதனை அறிவினைக் கூடியதால் அவன்

இன்றுள பிறப்பினில் மேலும் மேலும்
இடைவிடாதுழைப்பான் வீடு பேறடைந்திட

44, 45. முற்பிறவி தனில் செய்த முயற்சிகளாலே
இப்பிறவி தனில் தனை அறியாமல்
நற்பயன் தரும் யோக தத்துவம் தனையே
நாடியே அடைவன் நல்லவன் இவனே
யோகம் தன்னை ஆராய்வோன் அதனுடன்
வேதம் சொலும் கர்ம பயனைக் கடப்பான்
யோகியோ பாவம் நீங்கிப் பல பிறவிகளில்
பக்குவம் அடைந்துப் பரகதியடைகிறான்

46. தவசியர் தமைவிட உயர்ந்தவன் யோகி
தத்துவம் கற்றவர் தம்மிலும் மேலவன்
உவகையுடன் கரும புரிபவர் தம்மிலும்
உயர்ந்தவன் எனவே யோகியாய்த் திகழ்ந்திடு

47. சித்தத்தை என்னிடம் வைத்தே நித்தமும்
சிரத்தையுடன் எனைப் பஜிப்பவன் உலகில்
உத்தம யோகியர் அனைவர் தம்மிலும்
உயர்ந்தவன் என்பது என் கருத்தறிவாய்

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் ஸம்பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை எனும் உபநிஷத்தில் தியானயோகம் என்று பெயர் பெற்ற ஆறாவது அத்தியாயம் முற்றும்.

# ஸ்ரீமத் பகவத் கீதை

ஏழாவது அத்தியாயம்

## ஞான விக்ஞான யோகம்

ஸ்ரீ பகவான் கூறியது:

1. என் பால் இசைந்த மனத்தினனாய்
   என்னையே சார்ந்து யோகம் தனை
   நன்னயமாய் முயன்று ஐயமின்றி
   என்னை அறியும் வழி கேள் பார்த்தா

2. எனை உணர்ந்த பின் மற்றெதுவும்
   இனி உணர்வதற்கு இலை எனவே
   அனுபவம் கூடிய ஞானம் தனை
   அனைத்தையும் மிச்சமின்றி உரைத்திடுவேன்

3. ஆயிரம் மனிதருள் சித்திதனை
   அடைந்திட ஒருவனே முயல்கின்றான்
   ஆயினும் அவர்களுள் எவனோ தான்
   அகம் தனில் எனை அறிகின்றான்

4. மண், நீர், தீ, காற்று, ஆகாயம்
   மனம், புத்தி, அகங்காரம் எனும்

என் வகையாகப் பிரிந்திருக்கும்
என்னுடை ப்ரக்ருதி என்றுணர்வாய்

5. இதை விட மேலாய் என் ப்ரக்ருதி
இன்னமும் ஒன்றுண்டு பெருந்தோளா
இதனினும் வேறாய் உயிர் உடைத்தாய்
இச்சகத்தினைத் தாங்குவதென்பதறி

6. உயிரனைத்தும் இரு பிரகிருதிகளால்
உண்டானவை என்று உணர்ந்திடுவாய்
உயிர்கள் உலகம் இவ்விரண்டும்
உதிப்பதும் அழிவதும் என்னாலே

7. என்னைக் காட்டிலும் மேல் என ஒன்று
ஏதும் இல்லை தனஞ்ஜயனே
பொன் மணிகள் சரட்டில் கோர்த்ததுபோல்
என்னில் இவை எல்லாம் கோர்த்ததப்பா

8. குந்தியின் மைந்தா நான் நீரில் சுவை,
சந்திர சூரியர் தம்மில் ஒளி நான்,
அந்தமில் மறைகளில் பிரணவம், வானில்
ஒலியாய், மனிதருள் ஆண்மையாய் உள்ளேன்

9. மண்ணில் நறுமணமும் தீயில் ஒளியும்
மாதவர் தவத்தில் தவமும் நான்

எண்ணிலா உயிர்களில் உயிர்ப்பாகி
இருப்பதும் நான்தான் என்றுணர்வாய்

10. எல்லாப் பொருளின் வித்து எனவே
இருப்பது நான் என்றறி பார்த்தா
நல்லறிவாளரின் அறிவும் நான்
தேசு மனிதரின் தேசும் நான்

11. ஆசையும் பற்றுமில்லாத
பலமாய் வல்லவரிடம் உள்ளேன்
மாசிலா தருமம் தனை மீறா
ஆசையாய் உயிர்களிடம் உள்ளேன்

12. சத்துவ ராஜஸ தாமஸமாம்
முக்குணத் தொடர்புள பொருளெல்லாம்
இத்தரையில் என்னால் தோன்றிடினும்
இவைகளில் நான் இலை ஆயிடினும்
என்னைச் சார்ந்திவை உள்ளனவே

13. முக்குண மயமான நிலைகளினால்
முழு உலகும் மயங்கி இருக்கிறது
இக்குணங்கள் தனக்கு அப்பாலாம்
என்றும் அழியா எனை அறிவதில்லை

14. குணங்களால் ஆன என் தெய்வ மாயை
தனையே தாண்டுதல் மிக அரிது

வணங்கி எனைச் சரண் அடைபவரே
வலிமையுடன் இதைத் தாண்டிடுவார்

15. மாயையால் ஞானம் தனை இழந்தோர்,
மக்களில் கீழ்நிலை அடைந்தோர், மூடர்,
தீயவர், அசுர இயல்புடை பாவிகள்,
தாமெனைப் போற்றுவ தென்பது இல்லையே

16. துன்புற்றோன், ஞானம் தேடுபவன்
இன்புறச் செல்வம் நாடுபவன்
மன்பதை போற்றும் ஞானியர் அர்ச்சுனா
புண்ணியர் நால்வகை எந்தனைத் துதிப்பரே

17. அன்னவர் நால்வருள் இடையறா யோகமும்
அணுவளவும் மாறா பக்திசெய் ஞானியே
என்னவன், எனக்குகந்தவன் அவனுக்கு
என்றுமே இனியவன் நான் என உணர்ந்திடு

18. நான் உரைத்த நால்வகை மனிதரும்
நல்லவர் எனினும் ஞானியே எந்தன்
ஆன்ம ஸ்வரூபம் என்பதென எண்ணம்
அனவரதம் யோக நிலைகளில் உள்ளவன்
அனைத்திலும் உயர் கதியாக எந்தனை
அனுதினம் நாடியே நிற்கிறான் நீ அறி

19. பல பல பிறவிகள் எடுத்ததன் பின்னே
''பாரெலாம் வாசுதேவன்'' என்பதை அறிந்த
நிலைதனில் என்னை வந்தடைகிறான் ஞானி
நேரில் காண்பதற்கரிய மஹாத்மா அன்னவன்

20. ஆசைகள் பலவால் அறிவை இழந்தவர்
அதனதன் நெறிமுறை தனைக் கடைப்பிடித்து
அவரவர் இயல்புகள் தூண்டுதலாலே
அன்னிய தெய்வங்கள் தமைப்பணிகின்றார்

21. எந்தெந்த பக்தன் சிரத்தையுடன் தான்
அந்தந்த தெய்வம் தன்னையே துதிக்க
சிந்தையில் எண்ணுவோன் சிரத்தை தனைநான்
சிறிதும் அசையாதிருந்திடச் செய்கிறேன்

22. அத்தகை சிரத்தையுடன் அப்பக்தனும்
ஆராதனை செய்து தன் மனம் நினைத்ததை
கைத்தலம் தன்னில் பெற்றிடும் வகையினில்
அத்தனை பொருள்களும் தருபவன் நானே

23. அற்ப மதியினர் அன்னவர் அடைந்திடும்
அனைத்தும் முடிவினை அடைவது திண்ணமே
அவரவர் தேவரை அவர்கள் அடைகிறார்
ஆனால் எந்தனை என் அடியவர் அடைகுவர்

24. ஒப்புயர்வு அழிவு இலாத எந்தன்
உண்மை ஸ்வரூபம் உணரா மூடர்கள்
இப்புவிதனில் புலன்களுக் கெட்டாதிருக்கும்
என்னைப் புலன்கள் காண்பதாய் எண்ணுறார்

25. என்னை யோக மாயை மறைப்பதால்
எல்லோருக்கும் நான் எட்டுவதில்லை
எனினும் மூடஉலகம் பிறப்பு
இறப்பிலா என்னை அறிவது இல்லை

26. சென்றன இருப்பன வருவனவாம்
என்றுள உயிர்கள் எலாம் அறிவேன்
என்றாலும் எனை இவ்வுலகுளோர்
எவரும் அறியார் என உணர்ந்திடுவாய்

27. விருப்பு வெறுப்பு தம்மில் விளைந்த
இரட்டை மோஹத்தால் உலகுயிரெல்லாம்
பிறக்கும் வேளை முதலே குழப்பம்
பெறுகிறதென்பதை அறிந்திடு அர்ச்சுனா

28. புண்ணியச் செயல்கள் புரிந்த மானிடர்
பாவம் நீங்கி இரட்டை மோஹ
எண்ணம் விடுத்தவர் உறுதி விரதம்
ஏந்தியே என்னை வழிபடுவார்கள்

29. மரணம் முதுமை இரண்டினின்றும் எனைச்
சரணமடைந்தே விடுபட முயல்பவர்
பரமமும் அத்யாத்ம தத்துவம் முழுவதும்
கருமங்கள் அனைத்தையும் அறிநதவராவார்

30. அதிபூதம் அதிதைவம் அதியக்ஞும் எனும்
அனைத்துடன் கூடியதாய் எனை அறிந்தோர்
நிதமும் யோகத்தில் நிலைத்தவர் தம் உயிர்
நீங்கிடும் பொழுதிலும் என்னை அறிகுவார்

இங்ஙனம் பிரம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் சம்பாஷணை யாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை எனும் உபநிஷத்தில் ஞான விக்ஞான யோகம் என்று பெயர் பெற்ற ஏழாவது அத்தியாயம் முற்றும்.



# ஸ்ரீமத் பகவத் கீதை

## எட்டாவது அத்தியாயம்

## அக்ஷரப்ரஹ்ம யோகம்

அர்ச்சுனன் கூறியது:

1. பிரமம் என்பது எதுவென்றும்
அத்யாத்மம் என்பது எதுவென்றும்
கருமம் என்பது எதுவென்றும்
அதிதைவம் என்பது எதுவென்றும்
அதிபூதம் என்பது எதுவென்றும்
அறிந்திடச் சொல்வாய் புருசோத்தமா.

2. உடலில் அதியக்ஞன் யார்? அவர்
உள்ள நிலை எது? என்பதையும்
அடக்கம் பயின்றவர் மரணப் பொழுதினில்
அறிவது எங்ஙனம் உனை? உரைத்திடுவாய்

ஸ்ரீ பகவான் கூறியது:

3. அழிவற்றதும் மேலானதுமாகி
அமைந்தது பிரமம். அதனுடை இயல்பே
அத்யாத்மம் எனவே உரைப்பார்
அவனியில் உயிர்கள் தோன்றி நிலைத்திடச்
செய்யும் வேள்வியே கருமம் என்பதாம்

4. உடல் எடுத்த மானிடர் தம்முன்
உயர்ந்தவனே! அதிபூதம் என்பது
திடமிலாதழியும் பொருளே, புருஷன்
தனயே அதிதெய்வம் என்கிறார்
உடலின் உள்ளே உறையும் நானே
உத்தமமான அதியக்ஞுமாகிறேன்

5. உயிர் விடுகையிலும் என்னையே நினைந்து
உடலைத் துறந்தெவன் செல்கின்றானே
உயர் நிலையாம் என் ஸ்வரூபம்தனனை
உண்மையில் அடைவான் ஐயமே இல்லை

6. இறுதிப் பொழுதில் எந்தப் பொருளை
எண்ணியே ஒருவன் மறைகின்றானோ
பொருளாம் அதனையே நினைத்தவன் என்பதால்
அப்பொருள் தனையே அன்னவன் அடைகிறான்

7. ஆதலால் எந்தப் பொழுதிலும் என்னையே
அகம் தனில் எண்ணியே போர் புரிந்திடுவாய்
மாதவன் என்னிடம் மனதையும் புத்தியும்
அர்ப்பணம் செய்வதால் என்னையே அடைவாய்

8. முயற்சியெனும் யோகம் கூடியதாம்
மனதுடன் ஒளிமிகும் பரம புருஷனை
அயர்விலாதென்றுமே சிந்தித்திருப்பவன்
அந்தப் புருஷன் தன்னையே அடைகிறான்

9, 10 முற்றும் உணர்ந்தவன், தொன்மையானவன்,
முழுதையும் ஆள்பவன், அணுவிலும் நுண்ணியன்
அனைத்தையும் தாங்குவோன், நினைப்பதற்கரியதோர்
வடிவம் கொண்டவன், கதிரவன் போல் ஒளி
படைத்தவன், கல்லாமை எனும் இருளுக்கு
அப்பாலிருப்பவன் எனும் பல சிறப்புகள்
அமைந்ததாம் ஒருவனை இம்மியும் அசைவிலா
மனமும் பக்தியும் இணையிலா யோக
வலிமையும் கொண்டவன் பிராணன் முழுதையும்
தனதிரு புருவ மத்தியில் நிறுத்தியே
உடல்தனை விட்டுயிர் பிரிகின்ற பொழுதிலே
நினைப்பவன் பரம புருஷனை அடைகிறான்

11. வேதம் உணர்ந்தவர் அழிவற்றதென்று
எதனைக் கூறுவரோ
வேண்டாம் என்றெலாம் விட்ட துறவியர்
புகுவது எவ்விடமோ
ஏதும் பற்றிலாத்துறவி பிரம்மசர்யம்
எதனால் விரும்புவரோ
இணையிலா அந்த நிலைதனை உனக்கு
எடுத்துக் கூறிடுவேன்

12, 13 இந்திரிய வாயில்கள் எல்லாம் அடைத்து
இதயத்தில் தன் மனம் தனை நிலை நிறுத்தி

சொந்தமாம் பிராணனை உச்சந்தலை தனில்வைத்து
யோக தாரணை தனில் நிலைத்திருந்து
ஓரெழுத்தாம் ஓம் எனும் பிரணவ மந்திரம்
உச்சரித்தென்னை உளம்தனில் எண்ணியே
எவன்தன் உடலினை விடுத்துச் செல்வனோ
அன்னவன் பரமகதி தன்னை அடைகிறான்

14. வேறெந்த எண்ணமும் இல்லாது எவ்
வேளையும் இடைவிடாதெனை எண்ணும் யோகி
சீர்மிகு நித்திய யுக்தனாம் அன்னவன்
தன் வசம் எளிதில் நான் அடைகிறேன் பார்த்தனே

15. உன்னத பக்குவ நிலை உள மாதவர்
என்னையே அடைகுவர் என்றும் அன்னவர்
இன்னலின் இருப்பிடம், நிலையிலா இயல்புடன்
இருந்திடும் மற்றொரு பிறவியை அடைந்திடார்

16. பிரம லோகம் வரை உள உலகுயிர்கள்
மறுபடி பிறப்பவை என உணர் அருச்சுனா
இருப்பினும் எந்தனை அடைந்தவர் என்றுமே
மறு பிறப்பேயிலார் குந்தியின் மைந்தனே

17. பிரமனுக்காயிரம் யுகம் ஒரு பகல்
இரவும் அவ்வணம் ஆயிரம் யுகமே
இரண்டையும் அறிந்தவர் இராப்பகல் தத்துவம்
என்னவென்றறிந்தவர் ஆகின்றனரே

18. பிரமனின் பகல் வந்ததும் தோன்றா
திருந்தவை யனைத்தும் தோன்றியே வெளிப்படும்
பிரமனின் இரவு வந்ததும் தோன்றிய
தனைத்தும் தோன்றா தொடுங்க மறைந்திடும்

19. பகலில் இவ்வுயிர்த் தொகை பிறந்து பிறந்து
இரவு வருகையில் தம் வசமின்றி ஒடுங்கிடும்
புகல்கிறேன் அருச்சுனா பகலில் இவையெலாம்
மறுபடி வெளிப்படும் என்பதை அறிந்திடு

20. தோன்றா நிலையில் இருக்கும் அதனினும்
தோன்றா நிலையில் நிலைத்துள ஒன்று
சான்றென உள்ளது மற்ற உயிரெலாம்
சாகும் பொழுதது அழிவது இல்லை

21. எதனை அடைந்தவர் திரும்புவதில்லை யோ
அதுவே அவ்யந்தம் அட்சரம் என்பதாம்
இந்திரியங்களுக் கெட்டாததாகவும்
என்றும் பழுது படாததானதும்
சொந்தமாய் இந்த குணங்கள் கொண்டதை
என்னுடை 'பரம பதம்' என்றுரைக்கிறார்

22. எவனுள் உயிரெலாம் இருக்கின்றனவோ
எவனால் அவையெல்லாம் வெளிப்படுகின்றதோ
அவனை அந்தப் பரம புருஷனை
அனன்ய பக்தியால் அடையலாம் பார்த்தா

23. எத்தருணம் உடலை விட்டிடும் யோகியர்
இத்தலை திரும்பார் என்பதனையும்
எத்தருணம் உயிர் துறக்கும் அன்னவர்
இத்தரை திரும்புவார் என்பதனையும்
எடுத்துரைப்பேன் பரத குலப் பெருமகனே

24, 25 தீ, ஒளி, பகல், வளர்பிறை, உத்தராயணம்
தனில் உடல் நீத்திடும் பிரம ஞானியர் பிரமம்
தன்னை அடைவார் என நீயறிவாய்
புகை, தேய்பிறை, இரவு, தட்சிணாயணம்
தனில் உடல் நீத்திடும் யோகி விண்மதியுடை
தண்ணொளி பெற்றுமே மறுபிறவியடைகிறான்

26. ஒளி, இருள் என்னும் விழிகள் இரண்டு
உண்டென உலகோர் கருதுவர் அதனில்
ஒரு வழி பிறவா நிலைதனை அருளும் மற்
றொரு வழி மீண்டும் பிறந்திட வைத்திடும்

27. விழிகள் இரண்டையும் அறிந்த யோகியின்
வாழ்வினில் மோஹம் என்பதே இல்லை
பொழுதெலாம் யோகம் தனில் நிலைத்தே நீ
பழுதிலா வாழ்க்கை வாழ்ந்திடு அருச்சுனா

28. வேதம் பயிலுதல், வேள்வி புரிகுதல்
தானமும் தவமும் செய்திடல் இவைகளால்

யாதொரு நற்பயன் கிடைக்குமோ, அறிந்தவன்
யாவையும் கடந்தே பரநிலை அடைகிறான்

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும், யோக சாஸ்திர மாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும், அர்ஜுனனுக்கும் சம்பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை எனும் உபநிஷத்தில் அட்சரப்ரம்ம யோகம் என்று பெயர் பெற்ற எட்டாவது அத்தியாயம் முற்றும்.



# ஸ்ரீமத் பகவத் கீதை

## ஒன்பதாவது அத்தியாயம்

## இராஜ வித்யா இராஜ குஹ்ய யோகம்

ஸ்ரீ பகவான் கூறியது:

1. அறியாமை எனும் தீங்கினை விட்டு
அகன்றிட வைக்கும் அனுபவம் தன்னுடன்
செறிந்ததும் ஆழ்ந்ததும் ஆன நல்லறிவினை
சிறிதும் பொறாமை இலா உனக்குரைப்பேன்

2. வித்தைகளுள் இந்த நல் அறிவே வேந்தன்
வியத்தகு தருமம் தன்னுடன் திகழ்ந்திடும்
சுத்தமாய் உள்ள வத்துவில் சிறந்தது
செய்வதற் கெளியது அழிவே அற்றது
மறை பொருள் அனைத்திலும் மேலென உள்ளது
மனம் நிறைவுறவே கண்முன் தெரிவது

3. எதிரிகள் தம்மையே எரித்திடும் அருச்சுனா
இத்தருமம் தனில் சிரத்தையிலாதவர்
கதி யறியாது, எனை அடையாமல்
மரண சம்ஸார நெறிதனில் உழல்கிறார்

4. உருவமற்ற பரம் பொருளாகிய நான்
உலகம் அனைத்திலும் நிறைந்தே உள்ளேன்
இருக்கும் உயிர்கள் எல்லாம் என்னிடம்
இருப்பவை. நானோ அவைகளில் இல்லை

5. என்னிடம் பொருள்கள் இருப்பவை அல்ல
இருக்கும் பொருள்களை ஆக்கிக்காக்கும்
என்னுடை தெய்வீக யோகம் தனைக்காண்.
இருப்பு பொருள்களில் உடையவன் அல்ல நான்

6. எங்கும் என்றும் அளவிலாதுலவும்
இயல்புடை காற்று இருப்பு வானில் போல்
தங்கியே என்னிடம் எல்லாப் பொருள்களும்
தானுளதென்பதை நீ உணர்ந்திடுவாய்

7. குந்தியின் மைந்தா குவலயப் பொருளெலாம்
கல்பமுடிவில் என் பிரகிருதியை அடைந்திடும்
வந்தே அடைந்தவை மீண்டும் ஓர் கல்பம்
வந்திடும் வேளையில் தோன்றிடச் செய்கிறேன்

8. தன் வசமிழந்து என் வசம் இருந்த
தாரணி உயிர்த்திரள் அனைத்தையும் பரிவுடன்
என்னுடை பிரகிருதி தன்னுடைய வலிமையால்
இப்புவி தனில் மீண்டும் மீண்டும் படைக்கிறேன்

9. இத்தகை செயல்களில் பற்றே இல்லாமலும்
இவற்றை அனைத்தையும் ஒதுக்கியவன்போல்
நித்தம் இருக்கும் என்னை இச்செயல்கள்
நிச்சயம் பிணைத்திடா தென்றறிந்திடு தனஞ்செயா

10. குந்தியின் மைந்தா என்னுடை பார்வையில்
இயங்கியே அசையும் அசையாப் பொருளெலாம்
இந்தப்ரகிருதி தோன்றிடச் செய்வதால்
என்றுமிவ்வுலகம் சுழல்கிறதறிந்திடு

11. அத்தனை உயிர்களின் ஈசன் எந்தன்
அரிய பரம இயல்பறியா மூடர்கள்
இத்தரை தன்னில் மனித உருவில் வந்ததால்
எந்தனை மதித்தடா இயல்புடன் உள்ளனர்

12. வீணாசை கொண்டவர் வீண் தொழில் புரிபவர்
வீணறிவுடையவர், கோணல் மதியினர்
வாணாளில் தம் மதி மயக்கிடும் தீயதாம்
அரக்கர் அசுரர் தம் நெறி தொடருவார்

13. மாதவச் செல்வர்கள் தெய்வத்தன்மையை
மதித்து அதன் வழி நடந்து உயிர்களின்
ஆதியும் அழிவற்றவனும் நான் என
அறிந்தவர் சிந்தையில் வேறின்றித் துதிக்கிறார்

14. மனதில் உறுதியுடன் நித்திய யோகியர்
அனவரதம் என் நாமமும் குணங்களும்

நினைந்தே பாடியும் எனைப்பெறும் முயற்சியில்
நமஸ்கரித்தே என்னை உபாஸனை புரிகிறார்

15. உருவமும் குணமும் இலாத பிரமமாய்
உணர்ந்தென ஞான வேள்வியால் சிற்சிலர்
இரண்டிலா மனநிலை தன்னுடன் வணங்குறார்
இன்னும் சிலர் பலப்பல உருக்களில் விளங்கிடும்
இறைவனாய் தன்னில் வேறென எண்ணிப் பணிகிறார்

16. வேள்வியும் கிரதுவும் ஸ்வதாவும் நானே
வேள்வியில் ஆஹுதி செய்பொருள் மூலிகை
வேத கருமங்களில் ஓதிடும் மந்திரம்
வேள்வித்தீ நெய் ஹோம கருமமும் நானே

17. உலகம் தன்னுடை தந்தை, தாய், பாட்டன்
உளசெயல் அனைத்தின் பயனை அளிப்பவன்
நலம் தரு ருக் யஜுர் ஸாமமாய் ஆனவன்
அறிந்திடத தக்கவன் பிரணவமும் நானே

18. புகலிடமாய், வளர்ப்பவனாய், உடையவனாய்,
சாட்சியாய்,
பிறப்பிடமாய், இருப்பிடமாய், அடைக்கலமாய்,
தோழனுமாய்,
புகுந்தொடுங்கும் இடமதுவாய், களஞ்சியமாய்,
அழியாத
வித்தெனவே விளங்குவதும் நானேதான்
என்றறிவாய்

19. கதிரவன் வடிவில் வெப்பம் அளிப்பவன்
கனமழை பொழிதலும் தடுத்தலும் புரிபவன்
உதித்தது அனைத்தையும் ஒடுங்கிடச் செய்பவன்
ஒரு பொழுதும் இறவாப் பெருநிலை கொண்டவன்
அழிவது அழியாததெனும் இருவகைப் பொருள்கள்
அனைத்துமே நான் தான் அறிவாய் 'அருச்சுனா

20. வேதங்கள் மூன்றும் கற்றவர்கள்
வேள்விகளால் என்னைப் பூசித்து
தீதிலா சோம பானமதைத்
துய்த்துப் பாவம் தேய்ந்தவராய்
அடைந்திட எண்ணிய சுவர்க்கமதை
அடைந்த பின் அங்குளதேவர் என
கிடைத்தற்கரிய இன்பமெலாம்
கிடைக்கப் பெற்றே மகிழ்ந்திடுறார்

21. பரந்துள சுவர்க்கம் தனில் அவர்கள்
பல நாள் வாழ்ந்திடப் புண்ணியம்தான்
குறைந்திட மீண்டும் மானிடராய்க்
குவலயம் தன்னுள் புகுகின்றார்
போகத்தில் நாட்டம் கொண்டதனால்
பெரிதென வைதீகக் கருமமதை
வாகுடன் பற்றியே வாழ்வதனால்
வருவதும் போவதும் எனஉள்ளார்

22. என்னைத்தவிர வேறொன்றில்
என்றும் நாட்டம் இல்லாதவராய்
என்னையே நினைத்துப் பூசிப்போர்
எவரோ அவர்நலம் காப்பேன் நான்

23. குந்தியின் மைந்தா! சிரத்தையுடன்
கூடியே பிறபல தெய்வமதை
வந்தனை செய்பக்தர் அறியாமல்
எந்தனை வணங்குறார் என்றறிவாய்

24. அத்தனை வேள்வியில் உண்போனும்
அவைகளின் பயனைத் தருபவனும்
அத்தன் நான் இதை அறியாமல்
அறநெறி வழுவி வாழ்கின்றார்

25. தேவரைப் பணிபவர் தேவரையும்
முன்னோரைப் பணிபவர் அவர்களையும்
ஆவலுடன் பூதங்கள்தமைப் பணிவோர்
அவைகளைத் தாம் போயடைந்திடுவார்
பக்தியுடன் என்னைத் துதிப்பவரோ
பரமனாம் எனையே அடைந்திடுவார்

26. பக்தியுடன் இலையோ, மலரோ, பழமோ
பருகும் நீரோ எவன் அளித்திடினும்
சித்தத் தூய்மையோடு அவன் தரும் அதனை
சீரிய அன்பளிப்பென நான் அருந்துவேன்

27. எந்தச் செயல் நீ செய்தாலும்
எதனை உணவெனக் கொண்டாலும்
எந்தப் பொருளை ஆகுதியாய்
ஈந்தே வேள்வி புரிந்தாலும்
எந்தப் பொருள்தனை ஈந்தாலும்
எந்தத் தவம் நீ செய்தாலும்
குந்தியின் மைந்தா! இவை அனைத்தும்
கண்ணன் எனக்கு அர்ப்பணிப்பாய்

28. இவ்வண்ணம் நல்வினை தீவினையாம்
இரண்டின் வடிவாம் கருமங்கள்
ஒவ்வாததென விட்டு உறுதியுடன்
துறவற நிலையுடன் எனை அடைவாய்

29. எல்லா உயிர்களிடத்திலும் நான்
இருப்பது ஒரே சம நிலையில் தான்
பொல்லாப்பகைவன் என்றெனக்கில்லை
பிரியன் என்றும் எவனும் இல்லை
பக்தியுடன் என்னைத் துதிப்பவரைப்
பரிவுடன் என்னிடம் கொண்டிடுவேன்
பக்தர்கள் அன்னவர் தம்மிடத்தில்
பரிவுடன் நானும் தங்கிடுவேன்

30. தீய நடத்தை உடையவனும்
வேறு எதனையும் எண்ணாமல்

தூயதெனைத்தொழல் என முனைந்தே
துதிப்பவன் சாது எனக்கொளல் வேண்டும்

31. விரைவில் அவனே தரும நெறி
விரும்பிடும் நிலைமை அடைந்திடுவான்
ஒரு நாளும் மாறா சாந்தி நிலை
உண்மையில் அவனே அடைந்திடுவான்
என்னுடை பக்தன் ஒருக்காலும்
இழிந்து அழிந்திடான் எனும் உண்மை
தன்னை குந்தியின் மைந்தா நீ
நன்குணர்ந்தே பிறர் தமக்குரைப்பாய்

32. பெண்கள், வைசியர் கீழ்குலத்தோர்
பிரியமுடன் என்னைச் சார்ந்திருந்து
உண்மையில் நிச்சயம் நற்கதியடைவார்
உணர்ந்து கொள் பார்த்தா நீ இதனை.

33. அந்தணராம் புண்ணியரும் பக்தர் ராஜ ரிஷிகளுமே
அடைந்திடுவார்நற்கதிஎன்றுநவிலுவதும்அவசியமோ?
எந்தவித சுகமுமின்றி நிலைற்ற தெனவும் உள்ள
இவ்வுலகைப் பெற்ற நீ எந்தனை வழிபடுவாய்

34. என்னிடமே மனம் நிலைத்ததுவாய்
என்னுடை பக்தனாய்த் தான் ஆகி
என்னை என்றும் பூசித்து

என் பொருட்டே வேள்வி புரிபவனாய்

என்னை வணங்கித் தாள் பணிந்து

என்னை அடைந்திடும் உறுதியுடன்

என்னைப் புகலென்றடைந்திடுவாய்

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திர மாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் சம் பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில் ராஜவித்யா ராஜ குஹ்ய யோகம் என்னும் பெயர் பெற்ற ஒன்பதாவது அத்தியாயம் முற்றும்.



# ஸ்ரீமத் பகவத் கீதை

## பத்தாவது அத்தியாயம்

## விபூதி யோகம்

ஸ்ரீ பகவான் கூறியது:

1. பிரியமுடன் என் உரை கேட்பவனே
பெருவலி படைத்ததோள் கொண்டோய்
மறுபடி உயர்ந்திடும் நன்மை தரும்
மொழிகள் உரைப்பேன் நீ கேட்பாய்

2. என் தோற்றம் தனை தேவகணங்கள்
இருடிகள் தாமும் உணரவில்லை
இருடிகள், தேவர்கள் அனைவர்க்கும் முதல்
எனவே இருப்பவன் நானன்றோ

3. ஆதி இல்லாதவன், பிறப்பிலி, இந்த
அகில உலகிற்கும் இறைவன் என
மாதவன் என்னை உணர்பவன் என்றும்
மதிமயக்கம், பாவம் நீங்கியவன்

4, 5 புத்தியும் ஞானமும் தெளிவுடை மனமும்
பொறுமை உண்மை புலனடக்கம்

சித்தமடக்கம் இன்ப துன்பமும்
சிந்தையில் அச்சம் அச்சமில்லாமையும்
இன்னல் எவ்வுயிர்க்கும் இழைக்காப்பண்பும்
இருப்பது போதும் எனும் மனப்பாங்கும்
உன்னத சமநிலை நற்றவம் தானம்
உயர் புகழ், இகழ்ச்சி எனும் பல நிலைகளும்
என்னில் தோன்றி உயிர்களைச் சாரும்

6. அத்தனை உயிர்களும் தோன்றக் காரணம்
ஆன முனிவர் எழுவர், நான்கு மனுக்களும்
சக்தியில் எனக்கிணையாகவே எந்தன்
சித்தம் தனிலே தோன்றினர் தாமே

7. என்னுடை இந்தப் பெருமைகள் யாவும்
என்னிடம் இருக்கும் யோக சக்தியும்
தன் மனம் தனிலே முழுதும் உணர்பவன்
தானே அசையா யோகம் அடைவான்
தத்துவம் இதில் ஐயம் அளவுமில்லை

8. அனைத்தும் பிறக்கும் இடம் நான் என்னும்
அனைத்தும் என்னிடமிருந்தே விரிவது
என உள்ள உண்மை அறிந்த ஞானியர்
என்னை அன்புணர்வுடனே துதிப்பர்

9. சித்தத்தில் எனையே வைத்தவர் தங்கள்
சீவனாய் எனையே எண்ணிப் பிறரிடம்

நித்தமும் எனையே பொருளாய் பேசி
நினைந்து நினைந்தென் லீலைகள் இசைத்து
நெஞ்ச நிறைவும் மகிழ்வும் பெறுவர்

10. நிலை பெற்ற யோகம் பயிலும் மனிதராய்
நீங்கா அன்புடன் எனைத்துதிப்பவர்க்கே
நிலையாய் என்னை அடைந்திடும் வழியை
நல்கும் புத்தி யோகம் அருள்கிறேன்

11. அத்தகை பக்தர் உள்ளங்கள் தனிலே
அருளுடன் நிலைத்து அமர்ந்திடுவேன் நான்
புத்தொளி பரப்பும் ஞான விளக்கால்
புன்மை, அறியாமை இருளை ஒழிப்பேன்

அர்ச்சுனன் கூறியது:

12, 13 நீயே பரப்ரம்மம், உயர்ந்த உறைவிடம்
நீயே புனிதப் பொருளாவாய்
தூய முனிவராம் நாரதர் அஸிதர்
தேவலர், வியாஸர் முதலானோர்
என்றும் எங்கும் இருக்கும் புருஷன்
பிறப்பிலாக் கடவுள் ஆதியாய் உள்ள
குன்றா ஒளிமிகு தேவனென்றும்
கூறுவர் நீயும் அதனை உரைத்தாய்

14. கூறியதனைத்தும் கேசவனே
குறைவிலா உண்மை என அறிவேன்

சீரிய உந்தன் வடிவமதைத்
தேவரும் அசுரரும் அறிந்திலரே

15. உன்னால் உன்னை நீயறிவாய்
உலகைப் படைத்து ஆள்பவனே
என்னாளும் ஈடிணை இல்லாத
இப்புவிநாயக புருஷோத்தமா

16. எந்தெந்த தெய்வீக சக்திகளால்
இத்தனை உலகிலும் நிறைந்தனையோ
அந்தந்த சக்திகள் மிச்சமின்றி
அடியனுக்குரைப்பதுன் கடன் அன்றோ?

17. நினைந்து நினைந்து உனை எவ்வண்ணம்
நெஞ்சில் உமை நன்கு உணர்ந்திடலாம்
அனைத்துப் பொருள்களில் எப்பாங்கில் உனை
அறிந்திடும் நிலை யோகி நீ உள்ளாய்

18. உந்தன் யோக சக்தியதும்
உயர்ந்த தெய்வீக சக்திகளும்
எந்தனக்கு மீண்டும் விரித்துரைப்பாய்
ஏனெனில் உன் மொழி தெவிட்டவில்லை

ஸ்ரீ பகவான் கூறியது:

19. என்னுடை தெய்வீக சக்திகளுக்
கெல்லை என்பதே இல்லையன்றோ?

உன்னிடம் அவற்றில் சிறந்தவற்றை
உரைப்பேன் குருகுலத்து மணியே

20. அனைத்துயிர் இதயம் தனிலெல்லாம்
அமரும் ஆன்மா நானே தான்
அனைத்துயிர் ஆதி, நடு, முடிவும்
அறிவாய் நானே குடா கேசா

21. ஆதித்தியருள் நான் விஷ்ணு
அரிய ஒளிதரும் பொருள்களிலே
மேதனிக் கொளிதரும் கதிரவன் நான்
மருத்தில் மரீசி விண்மீன்களில் சந்திரன்

22. மறைகளுள் சாமம், தேவரில் இந்திரன்,
மனதாய் இந்திரியங்களில் நானே
மண்டிடும் உலக உயிர்களனைத்திலும்
உணர்வாய் அமர்ந்தேன் அறிவாய் நீ

23. உருத்திரருள் நான் சங்கரனாய்
உள்ளேன், யட்சருள் குபேரன் நான்,
பெருமலைகள் தம்முள் மேரு நான்,
நெருப்பாய் வசுக்களுள் நான் உள்ளேன்

24. குருக்களில் நான் பிரஹஸ்பதி,
களங்களின் சேனைத் தலைவர்களில்

முருகன் நானே, நீர்நிலையில்
மாகடல் நான் தான் என்றிவாய்

25, 26 முனிவர்களில் நான் பிருகு ஆவேன்.
மேலான வேள்வியில் ஜபமாவேன்.
தனித்த ஓரெழுத்து வடிவான
பிரணவமாய் சொற்களில் நான் இருப்பேன்.
அசையாப் பொருள்களில் இமயம் நான்.
அரசமரம் நான் மரங்களிலே.
அமர முனிவருள் நாரதன் நான்.
அழகிய கந்தர்வரில் சித்ரரதன்
அரிய சித்தருள் கபிலன் நான்.

27. சீரிய அமுதுடன் தான் உதித்த
உத்தம உச்சைஸ்ரவஸ் என்னும்
உயர்பரி நானே குதிரைகளில்.
மனிதரில் நானே மன்னவனாம்.
மாவேழங்களில் ஐராவதம்.

28. மண்ணில் பிறவிகள் தோன்ற வைக்கும்
மன்மதன் நானே அறிவாய் நீ.
படைகளில் நானே வச்சிரப்படை.
பசுக்களில் காமதேனு நான்.
பாம்புகளில் நான் வாசுகியே.

29. பித்ருக்களில் அரிய மான் நானே.
நாகங்களில் ஆதிசேடன் நான்.
நெறி வழி நடக்க வைப்பவருள்
நானே யமன். நீர் தேவதைகளுள்
நானே வருணன் அறிந்து கொள்வாய்

30. தைத்தியரில் நான் பிரஹலாதன்.
தவறாது கணக்கிடும் காலன் நான்.
அத்தனை விலங்கில் சிம்மம் நான்.
பறவைகளில் நான் கருடனப்பா.

31. தூயதாய் ஆக்கிடும் பொருள்களிலே
வாயு நானென்றறிவாய் நீ.
ஆயுதம் தரித்த வீரருள் நான்
அயோத்தி ராமன் என்றறிவாய்.
பாயும் நதிகளில் கங்கை நான்.
மீன்களில் மகர மீனாவேன்.

32, 33 படைப்புகளில் முதலும் முடிவும்
நடுவும் நான் என்றறிவாய்.
அடைவதற்கரிய அத்யாத்மமெனும்
வித்தையாம் நானே வித்தைகளில்.
வாதமாய் தர்க்கத்தில் நானிருப்பேன்.
ஆதியாய் உள்ள அகாலமெனும்
அக்ஷரம் எழுத்தில் நானாவேன்.

சொற்கள் புணரும் வகைகளிலே
அற்புத இரட்டைச் சேர்க்கை நான்
நற்செயல் தீவினைப் பயன் அளிக்கும்
நாதன் நானே என உணர்வாய்.
அழிவே இல்லாக்காலம் நான்

34. மாதர்களில் நான் இலக்குமியே
மாமலரமர் கலைமகளும் நான்
மேதை திடசித்தம் பொறுமை
நினைவும் புகழும் துணிவும் நான்
ஏதும் இன்றியே எல்லாம் அழிக்கும்
மரணம் என்பதும் நானே தான்

35. ஸாமகானத்தில் பிருஹத் ஸாமம்
சந்தங்களில் நான் காயத்ரி
மாதங்களில் நான் மார்கழியும்
மலர்தரும் வஸந்த ருதுவும் நான்

36. வஞ்சகரின் சூதாட்டம் நான்
வெற்றியும் தளரா முயற்சியும் நான்.
மிஞ்சும் ஒளியைக் கொண்ட மனிதரின்
மேலாம் ஒளியாய் நானுள்ளேன்.
நெஞ்சில் சத்துவ குணம் நிறைந்தோர்
நிறைந்திடு சத்துவ குணமும் நான்.

37. விருஷ்ணியின் குலத்தில் வாசுதேவன் நான்
வியாஸராய் முனிவருள் நான் உள்ளேன்

குருகுல ஐவரில் தனஞ்ஜயன் நான்
கவிஞர் தம்முள் சுக்கிராசாரியும் நான்

38. அடக்கியாளும் மனிதரிடம்
அடக்கும் தண்டம் என உள்ளேன்.
அடைவோம் வெற்றி என்பவரின்
அறமாய் நானே விளங்குகின்றேன்.
ரஹஸியம் காக்கும் மௌனம் நான்.
ஞானிகள் ஞானமும் நானே தான்.

39. அத்தனை உயிர்களின் வித்தாக
அமைந்தது நானே என்பதையும்
இத்தரை தன்னில் என்னருளின்றி
அசையும் அசையாப் பொருள் எதுவும்
இயங்கா தென்னும் உண்மையதும்
எந்தன் தோழனே நீ அறிவாய்

40. என்னுடை தெய்வ சக்திக்கு
எல்லையே இல்லை என்றாலும்
உன்னிடம் ஒரு சில மட்டும் நான்
உரைத்தேன் இதனை உணர்ந்திடுவாய்

41. வலிமையும் அழகும் மஹிமையும் கொண்டதாய்
வையகம் தனிலே உள்ளவை எவையோ
பொலிவும் எந்தன் அமிதத்தேசின்
பகுதி அவை என்று உணர்வாய் பாண்டவா

42. பலவகைப்பட்டதாய் இருக்கும் இதனைப்
பகுத்தறிந்து கொள்வதால் பயனுக்கென்ன?
உலகமனைத்தையும் எந்தன் யோக சக்தியின்
ஒரு பகுதி கொண்டு தாங்கி நிற்கிறேன்

**இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திர மாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத்கீதை என்னும் உபநிஷத்தில் விபூதி யோகம் என்று பெயர் பெற்ற பத்தாவது அத்தியாயம் முற்றும்.**



# ஸ்ரீமத் பகவத் கீதை

## பதினோராவது அத்தியாயம்

## விஃவரூப தர்சன யோகம்

அர்ச்சுனன் கூறியது:

1. எனக்குக் கருணை புரிந்திடவே
எண்ணி மிகப் பெரும் ரகசியத்தை
தனக்கு நிகரிலாப் பெரும் தத்துவத்தை
தானே விளக்கிய உன் மொழியால்
கமலக்கண்ணா என் மோஹம்
காணா தொழிந்து போனதையா

2. விமலா உன்னிடமருந்துயிர்கள்
வெளியில் வருவதும் மறைவதையும்
விரித்தே உரைத்தாய் கேட்டேன் நான்
விரிந்து பரந்த உன் மஹிமை
உரைத்தாய் அனைத்தும் கேட்டேன் நான்

3. உன்னைப்பற்றி நீ உரைத்ததெல்லாம்
உண்மை என்று நான் உணர்ந்தாலும்
என்னுடை கண்கள் உன் ஈஸ்வர ரூபம்
தன்னைக் கண்டிட ஆசை கொண்டேன்

4. என்னால் அந்த உருவம் கண்டிட
இயலும் என்று நீ நினைத்தால்
தன்னிகரில்லா உன் அழிவில்லாத்
திருஉருவம் தனைக் காட்டிடுவாய்

ஸ்ரீ பகவான் கூறியது:

5. பார்த்தா எந்தன் தெய்வீகப்
பல்வகை உருவங்கள் பார்த்திடுவாய்
பலபல நிறங்கள் வடிவங்கள்
பல நூறாயிரம் பார்த்திடுவாய்

6. ஆதித்தியர்கள் வசுக்களையும்
அஸ்வினிதேவர் உருத்திரர்கள்
மேதினியில் காணா விந்தைகளும்
மருத்துக்கள் தமையும் கண்டிடுவாய்

7. அசைவதும் அசையாப் பொருளனைத்தும்
அகில உலகங்கள் தம்மையுமே
இசைந்தே என்னிடம் நீ காண்பாய்
இன்னும் விரும்பும் எல்லாம் காண்

8. ஊனக் கண்களைக் கொண்டு எந்தன்
உண்மை உருக்காண இயலாது
நான் தரும் தெய்வீக விழிகள் கொண்டு
நீ என் ஈஸ்வர யோகம் காண்

ஸஞ்ஜயன் கூறியது

9. மன்னா இந்த வண்ணம் உரைத்து
மஹா யோகேஸ்வரன் ஹரியும்
தன்னுடை உத்தம தெய்வ வடிவம்
தன்னைப் பார்த்தன் தான் காண

10. கண்ணன் காட்டிய பேருருவம் பல
கண்கள் முகங்கள் கொண்டதுவாம்
கண்ணைப் பறிக்கும் மணியணிகள்
கைகளில் திவ்விய ஆயுதங்கள்

11, 12 மாலைகள் ஆடைகள் பல அணிந்து
மேனியில் வாசனை பல பூசி
மேலாம் பேரொளி கொண்டு விரிந்து
நாலா வகை விந்தை நிறைந்ததுவாம்
எங்கும் முகங்கள் தெரிகிறதாம்
எல்லை இல்லாது பரந்திருக்கும்
தங்கிடும் ஒளி கொண்ட ஆயிரம் பரிதிகள்
தந்திடும் பேரொளித் திருஉருவாம்

13. பலபல வகையாய்ப் பிரிந்திருக்கும்
உலகங்கள் பலவும் ஓரிடத்தில
நிலைத்திருக்கும் அய்யன் திருஉருவம்
நின்றே பாண்டவன் அன்று கண்டான்

14. கண்ட தனஞ்ஜயன் உடல் சிலிர்த்து
கைகள் கூப்பிச்சிரம் தாழ்த்தி
அண்டர்கோனை வணங்கிப் பணிந்தவன்
அன்புடன் மொழிகள் பேசலுற்றான்

அர்ச்சுனன் கூறியது:

15. தேவா உந்தன் திருமேனியில் நான்
தேவர்கள் அனைவரும் காண்கின்றேன்
பூவிலமர்ந்தோன், முனிவர்கள், நாகங்கள்,
பூவுலகுயிர்களும் பார்க்கின்றேன்

16. பற்பல புயங்கள் வயிறுகள் வாய்கள்
பற்பல கண்களும் பற்பல முகங்களும்
அற்புத உருவம் காண்கிறேன் எனினும்
அடி நடு முடிவினைக் காணவில்லை

17. கதையும் கிரீடம் திகிரியும் ஏந்திக்
கண்ணைப் பறிக்கும் ஒளிப்பிழம்பாகி
எதுவென்று காணவும் அளவிடற்கரிதாய்
இரவியாய் மிளிரும் உம்மைக் காண்கிறேன்

18, 19 அழிவே இலாப் பரம் பொருள் நீயே
அறிய வேண்டிய பொருளும் நீயே
அவனி தனக்கு அடைக்கலம் நீயே
அணுவளவும் மாற்றமிலாதவன் நீயே

நிலைத்துள அறத்தின் காவலன் நீ
நீயே ஆதி புருஷன் அன்றோ!
கலை மிகு மதியம் இரவி உன் கண்கள்
கணக்கிலாப் புயங்கள் கொண்டவன் நீயே
நெருப்புக் கடவுள் உன் வாயெனத் திகழ
நீ உன் ஒளி கொண்டு உலகை எரிக்க
பரமா! அடி நடு முடிவெதுவும் இன்றி
பரந்து திகழும் உன் சக்தியைக் கண்டேன்

20, 21 விண்ணுலகிற்கும் மண்ணிற்கும் இடை
விரிந்துள இடத்தில் நிறைந்தே இருக்கும்
அண்ணலே திசையெலாம் காணும் உந்தன்
அற்புதம் மிளிரும் உக்கிர உருவம்
கண்டதும் மூன்று உலகங்கள் அஞ்சின
கணக்கிலாத் தேவர்கள் உன்னிடம் புகுந்தனர்
பண்களில் முனிவர் உன் புகழைப் பாடினர்
பயந்தவர் கைகள் கூப்பியே பணிந்தனர்

22. ஆதித்தியரும் ருத்திரரும் வசுக்கள் ஸாத்தியர் என்பவர்கள்
அசுவினி தேவர் மருத்துக்கள் முன்னோர்கள் எனும் பெரியவர்கள்
மாதவா உந்தன் திருவுருவம் கந்தருவர் யக்ஷர் அசுரர்கள்
மாதவர் சித்தரும் கண்டு மனம் மயங்கி நிற்கும் நிலை கண்டேன்

23, 24. நெடுந்தோளா! உன் பல பல முகங்கள்
நீண்ட கரங்கள் பலபல கண்கள்
தொடைகள் தோள்கள் பல பல பாதம்
தெற்றிப் பற்கள் இவையெல்லாம் கண்டே
உலகம் அனைத்தும் அஞ்சி ஒடுங்கிட
உன்னைக் கண்டு நானும் அஞ்சினேன்
பலபல வண்ணம் கொண்டே திகழும்
பரந்துள வானைத் தொடும் திருஉருவம்
உலைக்கனல் வீசும் அகன்ற கண்களும்
ஒளி திகழ் மேனி கண்டு நடுங்கியே
நிலையிலா மனமும் அச்சமும் கொண்டு நான்
நலம் தரும் அமைதியும் வலிமையும் கொண்டிலேன்

25. ஊழிக்கனலைப் போன்ற உன் வாய்கள்
உடலம் நடுங்க வைத்திடும் பற்கள்
ஆழி வண்ணக் கண்ணா இவையெலாம்
அடியேன் கண்டு திசைகளும் அறிகிலேன்
அகத்தினில் அமைதி அடையா எனக்கு
அவனியைத் தன்னுள் கொண்டவா அருள்வாய்

26, 27 சகத்தினை ஆளும் அரசர் கூட்டமும்
சுயோதனன் முதலாம் சோதரர் அனைவரும்
கங்கையின் மைந்தன் துரோணர் கர்ணனும்
களத்தினில் நம் துணை நிற்கும் வீரரும்

தங்களின் பற்பல வாய்களுள் நுழைகிறார்
தலைகள் பொடிபட்ட நிலையில் சிலருளர்

28. ஆறுகள் கடலை நோக்கியே என்றும்
ஓடும் நிலை போலே
அத்தனை மானிட வீரரும் உந்தன்
அனல்வாய் புகுந்தனரே

29. வேறுள கதியே இல்லா நிலையில்
விரைந்தே உயிர்களெல்லாம்
விட்டிற் பூச்சிகள் சுடர் விடும் தீயில்
விழுவது போல் வீழ

30. கனல் உமிழ் வாய்கள் கொண்டே நீயும்
உலகம் அத்தனையும்
கணத்தில் விழுங்கி நாவால் திசைகளை
நக்கிச் சுவைக்கின்றாய்
அனைத்து புவனமும் உந்தன் ஒளிமிகு
உக்கிர கிரணத்தால்
அணுவளவும் சுவடில்லா நிலையில்
சுட்டு எரிக்கின்றாய்

31. பயங்கரமான தோற்றம் கொண்ட
நீயார் என்றே தான்
தயவுடன் உரைப்பாய் தேவர்கள் கோவே
உன்னை வணங்குகிறேன்

அருள்புரி உந்தன் தன்மை
நானும் அறிந்திட விரும்புகிறேன்
மருள் மிகும் என்னால் உன்செயல் தன்னை
அறிந்திட முடியவில்லை

ஸ்ரீபகவான் கூறியது:

32. உலகை அழித்திடும் வலிமை மிகுந்த
காலனாய் நான் உள்ளேன்
உலகங்கள் எல்லாம் ஒடுங்கிடவே நான்
உவந்தே இங்குற்றேன்
நீயே இல்லாது போனாலும்
நிற்கும் எதிரிப்படை வீரர்
மாய்வர் இந்த உண்மை தனை நீ
மனதில் உணர்ந்திடுவாய்

33. எனவே நீயும் எழுந்திரு புகழை
அடைந்தே எதிரிகளின்
இனம் தனை வென்று தனமிகு அரச
பதவி அனுபவிப்பாய்
முனமே அத்தனை பேரும் என்னால்
அழிந்தனர் உணர்ந்திடு நீ
வித்தகா இடக்கை அம்பெறி வீரா நீயோர்
நிமித்த மாத்திரமே

34. என்னால் உயிரை முன்னம் இழந்த
இணையிலா வீட்டுமன் கர்ணன் துரோணன்
இன்னும் ஜயத்ரதன் மற்றுளவீரர்
இத்தனை பேரையும் நீயே கொல்வாய்
பயத்தை விடுத்துக் களத்தில் இறங்கிப
பகைவரை எதிர்த்துப் போரினைப் புரிவாய்

**ஸஞ்ஜயன் கூறியது**

35. கேசவன் சொன்ன மொழிகள் கேட்டுக்
கைகள் இரண்டும் கூப்பி வணங்கியே
பேசவும் அஞ்சி நா குளறியவாறு
பார்த்தன் கண்ணன் தன்னிடம் புகல்வான்

**அர்ச்சுனன் கூறியது:**

36. கண்ணா! உந்தன் புகழைக் கேட்டுக்
காசினி களித்துப் பெருமகிழ்வடையும்
அண்ணலே அரக்கர் அஞ்சியே ஓடுவார்
அருள்மிகு சித்தர் கணங்கள் வணங்கும்

37. பெரியவன் அளவிடற்கரியவன், தேவர்தம்
இறைவனும் உலகிதன் உறைவிடம் ஆனவன்
அரியவன் ஆதிமூலமும் ஆனவன்
அயனையும் விஞ்சிடும் ஐயனாய் நிற்பவன்
உள்ளதும் இல்லதும் ஆகியப்பானுமாய்
உள்ளவன் என்றுமே உள்ளவன் உன்பதம்

வள்ளலே! வணங்குதல் செய்திடா உயிர்களும்
உள்ளதோ எல்லையில் உருவுடைத் தேவனே

38, 39, 40, 41, 42

பண்டைய புருஷன் நீ ஆதிதேவன் நீ
பாருக்கு உறைவிடம் ஆகவே பொலிபவன்
மண்டிடும் அனைத்தையும் அறிபவன் அறிந்து
கொண்டிடப்படும் பொருள் ஆகவே உள்ளவன்
இப்புவி நிரம்பிடச் செய்தவன் நீ
எமனும் தீயும் வருணனும் மதியும்
ஒப்புயர்வில்லாப் பிரமனின் தந்தையாய்
உந்தனைப் பணிந்தேன் மீண்டும் பணிந்தேன்
ஆயிரம் முறைகள் பணிந்தேன் ஐயனே
அன்பன் நான் உன் முன்னும் பின்னும்
அத்தனை திசையிலும் அடிபணிந்தேன் நான்
அளவிடற்கரிய வீரியம் கொண்டோய்
எங்கும் நிறைந்தே இருப்பவன் அதனால்
எல்லாம் நீயாய் உள்ளவன் நீயே
தங்கள் பெருமையும் இவ்வுரு மஹிமையும்
தானறியாத என்னைப் பொறுப்பாய்
அறியாத்தனத்தால் அன்பின் மிகுதியால்
அருமை நண்பன் நீ எனும் கருத்தால்
சரியென்று எண்ணி ஒருமையில் அழைத்தேன்
சமம் என உம்மை நானும் நினைத்து

உண்ணும் பொழுதிலும் படுக்கும் பொழுதினும்
உவகையுடன் விளையாடும் பொழுதிலும்
கண்ணா உங்களை கண்ணியக் குறைவாய்க்
கருதியே பேசிய செயல் பொறுத்திடுவீர்
தனித்தே இருக்கும் பொழுதிலும் பிறருடன்
தானே நீங்கள் இருக்கும் பொழுதிலும்
உமை நான் ஏளனமாகவே பேசிய
என் குறைதனை நீ பொறுத்தருள் புரிவாய்

43. ஒப்புயர்வில்லாப் பெருமை படைத்தோய்
உயர்ந்தவர்க்குயர்ந்தவன், பூசனைக்குரியவன்
இப்புவி தனக்குத் தந்தையாய் விளங்கும்
எந்தையே உமக்கு மூவுலகம் தனில்
இணையானவரோ மிக்கானவரோ
இல்லை என்பதில் ஐயம் இல்லையே

44, 45 அய்யனே பூசைக்குரியவர் உந்தன் முன்
அடியேன் என் உடல் தரையில் கிடத்தி
துய்யனாம் உந்தன் தாள்கள் பணிந்து
தோத்தரித்துன் அருள் வேண்டி நிற்கின்றேன்
மைந்தனின் பிழைதனைப் பொறுத்திடும் தந்தை போல்
மனம் கவர் காதலி பிழைகளைக் காதலன்
சொந்தமாம் நண்பனின் பிழைதனை நண்பனும்
சிந்தையில் கொளாது பொறுத்திடும் செய்கைபோல்

எந்தனின் பிழைகளைப் பெரிதென எண்ணிடா
தின்னருள் புரிந்து நீர் பொறுத்திட வேண்டினேன்
இந்த நாள் வரையிலும் காணாத காட்சியை
இன்று நான் கண்டு என் இதயம் மகிழ்ந்துளேன்
அச்சமும் கொண்டதால் என் மனம் கலக்கம்
அடைந்ததால் உம்சுய உருவமே காட்டுவீர்
இச்சையும் கொண்டுளேன் அவ்வுருக் கண்டிட
எந்தனுக்கருள் செய்து அவ்வணம் காட்டுவீர்

46. சக்கரம் கதை தனை கரத்தினில் தரித்து
சிரத்தினில் மகுடமும் தரித்த உன் மேனியை
இக்கணம் கண்டிட அருள்புரி ஈசனே
ஈடிலா நான்கு கரங்களும் காட்டுவாய்
ஆயிரம் கரம் கொண்ட விசுவமூர்த்தியே
அருள்புரி நான்கு கரத்துடன் தோன்றிடு

ஸ்ரீ பகவான் கூறியது:

47. உன்னிடம் நான் கொண்ட நேசத்தால்
ஒளி மிகும் என்னுடை பேருருவம்
முன்னம் எவரும் காணா
முதன்மையான இவ்வுருவம்
எல்லையென்பதே இல்லாது
இருக்கும் இந்தப் பெரு வடிவம்
வல்லமை மிகுந்த என் யோக
வலிமை கொண்டு காட்டி நின்றேன்

48. குருவின் இனத்துப் பெருவீரா
உருவம் இதனின் எனைக்காணும்
அரிய பேறு வேறு எவர்க்கும்
அமையாதென்று நீ உணர்வாய்
வேத நெறியால் வேள்விகளால்
மாதவம், சடங்குகள், கொடைகளினால்
மேதினி இதனில் உனையன்றி
மானிடர் எவரும் காண்பதரிதாம்

49. அச்சம் தரும் கோர உருக்கண்டு
அறிவிழக்காதே கலங்காதே
இச்சைப்படி என் இயல்பான
வடிவம் தனை நீ காண்பாய்

ஸஞ்ஜயன் கூறியது:

50. வாசுதேவன் தான் உரைத்தபடி
வடிவம் முன்போல் காட்டி நின்று
மாசிலாப் பெரியோன் தன் சீடன்
மனதின் அச்சம் தனை மாற்ற

அர்ஜூனன் கூறியது:

51. இனிதாம் உந்தன் இவ்வடிவம்
இன்று கண்டென் மனம் தெளிந்தேன்
முனம் என் மன இயல்பு நிலை
முற்றும் அடைந்திடப் பெற்றேன் நான்

பகவான் கூறியது:

52. ஆவல் மிகுந்த நிலை தனிலே
அர்ச்சுனா நீ கண்ட என் வடிவம்
தேவரெல்லாம் காண விழைகின்றார்
தெரிசனம் உன்போல் எவர்கண்டார்?

53. எவ்வணம் எனை நீ கண்டாயோ
அவ்வணம் என்னைக் கண்டிடவே
திவ்விய மறைகள், வேள்வி தானம்
தவத்தால் என்றும் இயலாது

54. எதிரிகள் கூட்டம் வாட்டுபவா!
எதிலும் நாட்டம் இல்லாமல்
மதி கொண்டு பக்தி ஒன்றாலே
மாதவன் என்னைக் கண்டிடலாம்
உண்மையில் என்னை அறிவதற்கும்
உருவம் இதனைக் காண்பதற்கும்
அண்மையில் கூடி மகிழ்வதற்கும்
ஆட்படுவேன் இதை அறிந்திடுவாய்

55. என்பணி என்றும் செய்பவனும்
எனையே அனைத்திலும் மேலென்று
தன் மனம் தனிலே எண்ணுபவன்
தளராதென்றும் பக்தி செய்வோன்
பற்றுகள் ஏதும் இல்லாமல்

பார் உயிர்கள் மேல் சிறுபகையும்

அற்றவனாய் எவன் உள்ளானோ

அவனே என்னை அடைகின்றான்

**இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திர மாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில் விசுவரூப தரிசனம் என்று பெயர் பெற்ற பதினோராவது அத்தியாயம் முற்றும்.**



# ஸ்ரீமத் பகவத் கீதை

## பன்னிரண்டாம் அத்தியாயம்

## பக்தி யோகம்

அர்ச்சுனன் கூறியது:

1. நிலை பெற்ற மனதுடன் உந்தனையே
நினைத்துத் துதித்திடும் ஒரு சாரார்
புலன்கள் தமக்குப் புலனாகாப்
பரம் பொருள் பணிந்திடும் ஒரு சாரார்
இவ்விரு சாரார் தமக்குள்ளே
எவரே யோகம் உணர்ந்தவராம்?

ஸ்ரீ பகவான் கூறியது:

2. என்னிடம் மனதை நிலை நிறுத்தி
என்றும் சிரத்தையுடன் பணியும்
அன்னவர் யோகம் நன்குணர்ந்தோர்
என்றே நானும் எண்ணுகின்றேன்

3, 4 என்றும் புலன்கள் பொறியடக்கி
எந்த இடத்திலும் சமநோக்காய்
மனதுக் கெட்டாதிருப்பதுவும்
மொழிதலுக்கடங்காதிருப்பதுவும்

எங்கும் நிறைந்து இருப்பதுவும்
என்றும் அசைவின்றி நிலைத்ததுவும்
தங்கியே அழிவிலாதிருக்கும் ஒரு
தனிப்பரம் பொருளை நினைத்திடுவோர்
எல்லா உயிரும் இன்பமுடன்
இருந்திட வேண்டும் என நினைப்போர்
நல்லோர் அவர்கள் எந்தனையே
நாடியே வந்து தாமடைவர்

5. வடிவமில்லாத பரம் பொருளை
வணங்குவதில் சிரமம் மிக உண்டு
உடலில் ஆசை வைத்தவர்கள்
வடிவிலாப் பொருளை வணங்குவரோ?

6, 7 எல்லாக் கர்மமும் என்னிடத்தில்
இருக்க வைத்தென்னையே உயர் பொருளாய்
இல்லை வேறொரு எண்ணமென்றே
என்பால் சித்தத்தை வைத்தவரை
இறப்பெனும் துயரம் சூழ்ந்திருக்கும்
இடர் மிக சம்சாரக் கடல் விட்டு
விரைவில் கரை சேர்த்துக் காத்திடுவேன்

8. என்னிடம் உன் மனம் தனை நிறுத்து.
என்னிடம் புத்தியை வைத்து விடு.
பின்னர் என்னிடம் நீ உறைவாய்
பேச்சிதில் சிறிதும் ஐயமில்லை

9. என்னிடம் உன்மனம் தனை நிறுத்த
இயலவில்லை என நீ நினைத்தால்
உன்னதமாம் பயிற்சி யோகமதை
உடன் செய்தெனை அடைந்திட விரும்பு

10. முயற்சிகள் தம்மைப் புரிந்திடவே
முடியா நிலை வரின் செயல்களெல்லாம்
அயராது எனக்கெனச் செய்தவனாய்
ஆயின் சித்தி தனை அடைவாய்

11. இதனையும் செய்திட இயலாமல்
இருப்பின் சரண் என எனை அடையும்
மதியுடன், அடங்கிய மனதுடன் கர்ம
பயனனைத்தும் எனக்களித்திடுவாய்

12. ஞானம் முயற்சியினும் பெரிது
தியானம் ஞானம் தனில் பெரிது
தியானம் தனையும் மிஞ்சுவது
தியாகம் செய்திடல் செயல் பயனை
தியாகம் செய்தால் விரைவினிலே
தேடி வந்திடும் சாந்தி நிதம்

13, 14 உயிர்கள் அனைத்திலும் வெறுப்பின்றி
உள்ளத்தில் நேசமும் கருணையுடன்
துயரமும் இன்பமும் சமமாகத்
தானே நினைக்கும் பண்புடனே

எதையும் தாங்கிடும் பொறுமையுடன்
எந்த நேரமும் மன மகிழ்வுடனே
இதயம் தனியே நான் எனது
என்னும் எண்ணம் தனை விடுத்து
தன்னடக்கம் திட நிச்சயமும்
தானே கொண்டு யோகியென
என்னிடத்தில் மனம் புத்தி தனை
ஈந்தவன் எனக்குப் பிரியனப்பா

15. உலகுக் கெவனால் இடர் இலையோ
உலகால் எவனுக்கிடர் இலையோ
கலக்கம், களிப்பு, பயம், கோபம்
விட்டவனே எனக்கினியவனாம்

16. ஆசை சிறிதும் அற்றவனாய்
ஆற்றல் மிகுந்த தூயவனாய்
பாசத்தால் ஒரு பக்கமதைப்
பரிவுடன் சாராப் பண்புளனாய்
மனத்துயர் தன்னை ஒழித்தவனாய்
அனைத்துக் காமியச் செயல்களையும்
தனதிலை என்று துறந்தவனாய்த்
தானுளபக்தன் என் அன்பனப்பா

17. மகிழ்தல், வெறுத்தல், துன்புறுதல்
மனதினில் விருப்பம் தனையடைதல்

இகத்தில் நற்செயல், தீச்செயல்கள்
துறந்திட்ட பக்தன் என் அன்பன்

18, 19 பகைவன், நண்பன், தட்பம், வெப்பம்
சுகம், துக்கம், மானம், அவமானம்
புகழ்ச்சி, மகிழ்ச்சி, எலாம் சமமாய்
உகந்ததாய் ஏற்றிடும் மௌனியவன்
பற்றே இலாது கிடைத்ததையே
பரிவுடன் ஏற்றிடும் பண்புடையோன்
சற்றும் கலங்கா உறுதி கொண்டோன்
சாற்றிடுவேன் எனக்குகந்தவனாம்
இருக்க இடம் தேடா இயல்புடையோன்
என்றும் பக்திமான் எனக்கினியன்

20. என்னையே உயர்ந்த பொருளாக
எண்ணியே மிகவும் கருத்துடன் நான்
பன்னிய அமுதமாம் நெறிவழுவாப்
பேரறம் தனை நின்று கடைப்பிடிக்கும்
பக்தர்கள் எந்தன் மனதினுக்கே
பிரியமானவர்கள் என அறிவாய்.

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திர மாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் ஸம்பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில் பக்தி யோகம் என்ற பெயர் பெற்ற பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றும்.

# ஸ்ரீமத் பகவத் கீதை

## பதின்மூன்றாம் அத்தியாயம்

## க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்

அர்ச்சுனன் கூறியது:

இயற்கை, புருஷன், களம், களமறிந்தோன்
இன்னும் ஞானம் அதன் முடிவினையும்
தயவுடன் உரைப்பாய் கேசவனே இதைத்
தமியேன் அறிந்திட ஆசைகொண்டேன்

பகவான் கூறியது:

1. களம் என இந்த உடல் தனை அழைப்பார்
களமாம் இதனை அறிந்தவன் களமறிந்தோன் என
விளங்குவான் என்றே வித்தகர் கூறுவர்
அறிந்து கொள் குந்தியின் மைந்தா இதனை

2. களங்களாம் உடல்கள் அனைத்திலும் நானே
களங்களை அறிந்தவன் எனவாய் இருக்கிறேன்
களமும் அதனை அறிந்தோன் பற்றிய
அறிவே ஞானம் என்பதென் கொள்கை

3. செயல்களின் களம் அமைந்தது எவ்வணம்
செயல்களின் களத்தின் பிரிவுகள் எவை எவை

செயல்களின் களம் தோன்றியது எதனிடம்
செயல்களின் களம் அறிந்தவன் பெருமைகள்
சுருக்கமாய் இவைகளைச் சொல்கிறேன் அறிந்து கொள்

4. இந்த உண்மையைப் பலபல முனிவர்கள்
சந்தங்கள் பற்பல கொண்ட கவிதையாய்
எந்த நாளும் மாறா புத்தியை யுக்தியால்
தந்தே பிரமத்தைக் காட்டிடப் பாடினர்

5, 6 பூதங்கள் ஐந்தும் நானெனும் ஆணவம்
புலப்படா மூலப்ரக்ருதியும் புத்தியும்
இந்திரியங்கள் பத்து விஷயங்கள் ஐந்தும்
இன்ப துன்பமும் விருப்பும் வெறுப்பும்
உணர்வும் உறுதியும் உடலின் அமைப்பும்
களத்தின் தோற்றம் இவை எனக் கூறினர்

7, 8, 9, 10, 11
தருக்கிலாப்பண்பு, தற்பெருமையின்மை,
பொறுமை, அஹிம்சை, நேர்மை, தூய்மை,
குருசேவை, விடாமுயற்சி, தன்னடக்கம்,
பிறப்பிறப்பு, மூப்பு, பிணிக்கவலை யின்மை,
பற்றின்மை, மனைவி, மகன், வீடு
பற்றியே தனதெனும் நேசமிலாமை,
சற்றுமே வேண்டுதல் வேண்டாமை இன்றியே
சார்ந்திடா நடுநிலை தன்னிலே நிற்பது

மற்றேதும் எண்ணா யோகம் தலைக்கொண்டு
மனம் பிறழா பக்தி என்னிடம் வைத்திடல்
உற்றதே இலையென்று கூட்டம் ஒதுக்கி
ஒருவரும் இல்லாத தனியிடம் நாடுதல்
ஆத்ம ஞானம் தனில் நிலை பெற்றிடல்
அரியதாம் உண்மைப் பொருளை ஆராய்தல்
அனைத்தும் ஞானம் இவைகள் அல்லாத
அன்னியமானவை அனைத்தும் அஞ்ஞானமே

12. அறியத்தக்கது எது? எதனை
அறிந்தவன் சாகா நிலை அடைவான்?
பரப்ரம்மம் அதற்கு ஆதியில்லை
உளது இலது என்றே பகர ஒண்ணாதது

13. எங்கும் கைகால் கொண்டது அது
எங்கும் தலைகள் வாய்களையும்
எங்கும் காதுகள் உடையதுவாய்
இவ்வுலகம் அனைத்தும் பரந்துளது

14. புலன்கள் மூலம் ஒளிர்ந்தாலும்
புலன்கள் இல்லாதிருப்பதுவாம்
பற்றுகள் இல்லாதிருந்தாலும்
பற்றியே அனைத்தையும் தாங்குவதாம்
குணங்கள் அற்றதாய் இருந்தாலும்
குணங்களைத் தானே துய்த்திடுமாம்

15. பொருள்களுக்கு உள்ளும் புறமாக
இருக்கும். அசையும் அசையாது.
அறிந்திட ஒண்ணா நுண்ணியது
அருகிலும் எட்டியும் இருப்பதுவாம்

16. பிளவே இல்லாது இருந்தாலும்
பிளவுளதெனவே தோன்றிடுமாம்
உளபொருள் அனைத்தையும் தாங்குவதும்
உண்டு பின் தோன்றிட வைத்திடுமாம்

17. அனைத் தொளிகளுக்கும் ஒளியாகி
இருளுக்கப்பால் இருக்கும் என்பார்
அனைத்துயிர் உளத்தில் நிலைத்திருக்கும்
அறிவாய் அறியப்படு பொருளாய்
அறிவால் அடையப்படுவதுமாம்

18. களமும் ஞானமும் அறியப்படு பொருளும்
கருத்தறியும் வகை உரைத்தேன் சுருக்கமாய்
உளத்தில் இதனை அறியும் என் பக்தன்
உடன் எனை அடையத் தகுந்தவன் ஆவான்

19. பிரகிருதியும் புருஷனும் ஆதியிலாதவை
பிறபல வேறுபாடுகள் குணங்களும்
பிரகிருதியில் பிறந்தவை என்பதை உணர்ந்திடு

20. இந்திரியங்களுக்கும் உடலுக்கும்
இயற்கையே காரணம் என்றிடுவார்
வந்திடும் இன்ப துன்பமெல்லாம்
துய்ப்பது ஜீவன் என உரைப்பார்

21. ஆன்மா இயற்கை தனில் நின்று
அது தரும் குணங்களைத் துய்க்கிறது
தோன்றும் கேடு நலம் உடைய
பிறவிகள் தருவது குணப்பற்றே

22. உடல் தனில் உறையும் பரம புருஷனையே
உடனிருந்தே காணும் சாட்சி யென்பார்
திடமுடன் தாங்குவோன் அனுபவிப்போன்
மஹேஸ்வரன் பரமாத்மன் அனுபவிப்போன்

23. இவ்வண்ணம் பரம புருஷனையும்
இயற்கையை குணங்கள் உடன் அறிந்தோன்
எவ்வண்ணம் வாழ்பவன் ஆனாலும்
இவ்வுலகில் மீண்டும் பிறப்பதில்லை

24. தியானத்தால் நன்கு தெளிவடைந்த
திண்ணிய அறிவால் சிலர் உள்ளமதில்
ஆன்மாவைச் சிலர் உணர்கின்றார்
ஞானத்தால் கர்ம யோகத்தால் சிலர்
ஆன்மா தனையே உணருகின்றார்

25. உண்மை இதனை அறியா தோர்
உயர்ந்த பெரியவர் சொற்கேட்டு
திண்மையுடன் நம்பிக் கடைப்பிடித்தே
திடமுடன் மரணம் தனைக் கடப்பர்

26. நிலைத்தும், இயங்கிடும் உயிர்களெல்லாம்
நிலத்தில் களமும் களமறிந்தோன்
இலகும் இரண்டின் சேர்க்கையால் அருச்சனா
உலகில் தோன்றின என்பதை அறிந்திடு

27. உயிர்களனைத்திலும் சமமாக
உறைபவன் அழிவதுள் அழியாது
இயங்கும் பரமேஸ்வரன் தனையே
என்றும் பார்ப்பவன் பார்க்கின்றான்

28. எங்கும் சமமாய் நிலைத்திருக்கும்
ஈசனைக் காண்போன் தன்னைத்தான்
எங்ஙனும் அழித்துக் கொள்வதில்லை
எனவே பர கதி அடைகின்றான்

29. செயல்கள் புரிவது இயற்கை யென்றும்
செயலற்ற தான்மா என்பதையும்
உயரியதாம் இவ்வுண்மை தனை
உணர்ந்தே பார்ப்பவன் பார்க்கின்றான்

30. தனித்தனியே வாழும் அனைத்துயிரும்
தாமொரு பொருளில் தானிருந்தே
இனியும் அவைகள் விரிவடைந்தே
இருப்பதைக் காண்போன் பிரமமே ஆவான்

31. குந்தியின் மைந்தா முதலும் குணமும்
கேடுமிலா இப்பரமாத்மா
இந்த உடலில்தான் இருந்தாலும்
செயலும் பற்றும் அற்றதுவாம்

32. எங்கும் நிறைந்தே நுண்ணியதாய்
இருக்கும் வான் வெளி எப்பொழுதும்
தங்கிடும் குறையாய் களங்கமதைத்
தான் கொள்வதில்லை அதுபோல்தான்
தேகம் தன்னில் நிறைந்திருக்கும்
ஆன்மா களங்கம் அடைவதில்லை.

33. உலகமனைத்தையும் ஒளியுறவே
ஒரு கதிரவன் தான் புரிகின்றான்
இலகும் பரமனம் இவ்வகிலமெலாம்
இவ்வணம் ஒளிமயம் ஆக்குகின்றான்

34. களமும் களமறிந்தோன் தம்மிடையே
காணும் வேற்றுமை, உலகுயிர்கள்
உளதாம் இயற்கை தனை விடுத்து

விடுதலை அடைவதும் ஞானக்கண்ணால்
காண்போர் பிரமம் தனை அடைவர்

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திர மாயும் ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் சம்பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில் க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம் என்னும் பெயர் பெற்ற பதின்மூன்றாம் அத்தியாயம் முற்றும்.



# ஸ்ரீமத் பகவத் கீதை

## பதினான்காம் அத்தியாயம்

## குணத்ரய விபாக யோகம்

ஸ்ரீ பகவான் கூறியது:

1. எதனை அறிந்து முனிவர்கள்
இந்த உலக வாழ்வின் பின்
பதவியில் மேலாம் சித்தி பெற
உதவிய ஞானம் உரைத்திடுவேன்

2. பேரறிவாம் இதை அனுட்டித்தே
சீருருவம் தனை அடைந்தவர்கள்
பாரினில் மீண்டும் பிறப்பதில்லை
பிரளயத்தில் துன்பம் அடைவதில்லை

3. பாரதா! எந்தன் கருவறையாம்
பேரியற்கையில் கருவினை வைக்கின்றேன்
பாரில் உயிர்கள் அத்தனையும்
பிறப்பதவ்வியற் கையால் என்றறிவாய்

4. குந்தியின் மைந்தா பற்பல கருப்பையில்
பிறக்கும் உயிர்க்கு எலாம் பெரிய பிரகிருதி

சொந்தமான தாய் எனவே திகழ்கிறான்
தந்தையாய் கர்ப்பம் தருபவன் நானே

5. பிரகிருதியில் தோன்றிடும் மூன்று குணங்களாம்
சத்துவ இராஜஸ தாமஸம் எனவாம்
இறப்பிலா ஆன்மாவை உடலில் புகுத்திடும்
இவ்வுண்மை பெருந்தோள் வீரா புகன்றிடு

6. அழுக்கின்மையினால் சத்துவ குணம்
அதிக ஒளியுடன் கூடியதாய்
இழுக்காம், இடர் தனைத் தாராமல்
ஞானம் சுகப்பற்றால் பிணைக்கிறது

7. ஆசை வடிவாம் ரஜோ குணமென்றும்
ஆர்வமும் பற்றும் தருவதென்றும்
பாசம் வினையில் கொளவைத்து
பந்தப்படுத்திடும் ஆன்மாவை

8. அறியாமை இருள்தனில் பிறந்து
அனைத்துயிர்களை மயக்குவதாய்
உறக்கம் அசட்டை சோம்பலினால்
உயிரைக்கட்டிடும் தமோ குணமே

9. சத்துவம் சுகத்தில் சேர்க்கிறது
கருமத்தில் ரஜோ குணம் சேர்க்கும்
உத்தமா! பாரதா! தமோ குணமோ

உயரிய அறிவினை மறைத்துதவா
கவன மின்மை தனில் இணைக்கிறது

10. சத்துவம் ரஜஸையும் தமஸையும்
சில வேளை அடக்கி மேலெழுகிறது
சத்துவம் தனையும் தமஸினையும்
சில வேளை ரஜஸ் ஆள்கிறது
சத்துவம் தனையும் ரஜஸினையும்
சில வேளை தமஸ் அடக்குதப்பா

11. உடலின் பொறி வாயில் அனைத்திலுமே
ஒளி வீசி ஞானம் திகழுகையில்
திடமாய் சத்துவம் ஓங்குவதைத்
தெளிவாய்த் தெரிந்து கொண்டிடலாம்

12. பேராசை, வெளி விஷயங்களில்
பிரியம் கொண்டு முனைந்திடுதல்
தீராத அளவில் செயல் பெருக்கம்
சேர்வதனால் மன அமைதியின்மை
செயல்களில் அதிக விருப்பம் கொளல்
சேரும் இவை ரஜோ குணமிகையால்

13. குரு வம்சத்துப் பெரு வீரா
கொஞ்சமும் விவேகம் முயற்சியின்மை
சிரத்தையிலாது தவறிழைத்து

சித்த மயக்கம் இவை அனைத்தும்
சேர்ந்திடும் தமோ குண மிகையால்

14. சத்துவ குணம் ஓங்கி நிற்கையிலே
இத்தரை விட்டுயிர் துறந்திடுவோன்
உத்தம ஞானியர் நல்லுலகமதை
உறுதியாய் அடைவான் என உணர்வோம்

15. ரஜோ குணம் தன்னுடன் முடிவை அடைபவன்
கருமப் பற்றுள்ளோர்க்கிடையே பிறக்கிறான்
தமோ குணம் தன்னுடன் உயிரை விடுபவன்
தாய் தந்தையென அறிவிலார் தம்மை அடைகிறான்

16. நற்செயல் தரும் பயன் சாத்துவிகம் அது
நிர்மலம் என்றே பகர்கிறார். ரஜோகுணம்
பற்பல துன்பம் தந்திடும். தமோ குணம்
பயனெனத் தருவது அறிவிலாத் தன்மை

17. சத்துவம் தனிலின்று தோன்றிடும் ஞானம்
ரஜோ குணம் அளிப்பது பேராசையன்றோ
சித்தமயக்கம், கவனமிலாமை, அறியாமை
அத்தனையும் தரும் தமோகுணம் ஒன்றே

18. சத்துவ குணத்தோர் செல்வது உயர்நிலை
மத்தியில் ரஜோ குணத்தினர் நிற்பர்

புத்தியில் தாமஸ குணம் படைத்தவரோ
போவது கீழரம் நிலை தனை நோக்கி

19. குணங்கள் மூன்றினை அன்றித்தனியாய்
கர்த்தா வென்றொன்றினைக் காணாதிருப்போன்
குணங்கள் தமக்கு மேலாம் பரம் பொருள்
காண்பவன் பிரம சொரூபம் அடைகிறான்

20. உடலை உண்டாக்கும் முக்குணங்களைக் கடந்து
பிறப்பு இறப்பு முதுமையின் துன்பம்
விடுத்த நிலைதனில் உள்ளதோர் சீவன்
பெறுவது மரணமிலாப் பெரு வாழ்வே

அர்ச்சுனன் கூறியது:

21. குணங்கள் மூன்றையும் கடந்துளான் என்பதைக்
காட்டிடும் குறிகள் எவை எவை என்னும்
குணங்களைக் கடந்தவன் எங்ஙனம் வாழ்கிறான்
கடந்தது எப்படி? என்பதும் உரைத்திடு

ஸ்ரீ பகவான் கூறியது:

22. மனத் தெளிவு செயல், மதிமயக்கமும்
தனக்குத் தோன்றிடும் போதவை வெறுத்திடான்
நினைவை விட்டவை நீங்கிடில் அவற்றை
நினைத்தே விரும்புதல் தன்னையும் செய்திடான்

23. ஆன்மா தன்னில் நிலைத்தவனாய்
அனைத்தையும் காணும் சாட்சியெனத்
தான் அசையாது கருமமெல்லாம்
புரிவது குணங்கள் என உணர்வான்

24. இன்பம், துன்பம், இருநிலையும்
என்றும் ஒன்றெனக் கண்டிடுவான்
இன்னாததையும் இனியதையும்
ஏற்பான் சமமெனத்தான் நினைத்தே
நிகரெனக் கல், மண், பொன்னையுமே
நினைவில் கொண்ட தீரனவன்
இகழ்ச்சியும் புகழும் ஒன்றெனவே
ஏற்பவன், ஆன்மாவில் நிலைத்திருப்பான்

25. மானாவமானம் தனை விடுத்தோன்
மித்திரன் நண்பனெனும் பேதம்
தானிலான் குணங்கள் தமைக்கடந்தோன்
தனக் கெனத் தொழில் செயாத்தியாகியவன்

26. மாறாத பக்தியோகத்தால் முழு
மனதுடன் என்னை உபாசிப்போன்
வேறான முக்குணம் தனைக் கடந்தே
பிரம நிலை பெறத்தகுந்தவனாம்

27. மாறாத முக்தி நிலை பிரமம்
மறையா தென்றும் உள தருமம்

சரி நிகர் இல்லா சுகம் மூன்றும்

நிறைந்தே வாழும் இடம் நானே

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திர மாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில் குணத்ரய விபாக யோகம் என்று பெயர் பெற்ற பதினான்காவது அத்தியாயம் முற்றும்.



# ஸ்ரீமத் பகவத் கீதை

### பதினைந்தாவது அத்தியாயம்

## புருஷோத்தம யோகம்

ஸ்ரீ பகவான் கூறியது:

1. கிளைகள் கீழும் வேர்கள் மேலும்
கொண்டதோர் ஆலமரம் போலே
நிலையாய் அழியாதுள சம்ஸாரம்
நான்மறை மரத்தின் இலைகள் என்றும்
நன்கறிந்தோன் வேதமறிந்தவன் ஆவான்

2. அம்மரத்தின் கிளைகள் குணங்களால் செழித்து
அருந்தளிர்கள் என விஷயங்கள் அமைந்தே
மேலும் கீழும் படர்ந்திருப்பதுவாம்
இம்மேதினியில் வினைகள் விளைந்திட
இம்மரவேர்கள் கீழ் நோக்கிப் பரவின

3. இம்மர வடிவம் தென்படாதிருக்கும்
இருப்பு, துவக்கம் முடிவென்பதில்லை
செம்மையாய் வலுத்து வேரூன்றியிருக்கும்
இம்மரம் பற்றின்மை வாள் கொண்டு வெட்டியே

4. எப்பதம் பெற்றால் பிறப்பினி இல்லை யோ
அப்பதம் தன்னையே தேடிடல் உகந்தது

ஒப்பிலா எவனிடம் இருந்தே பண்டைய
தொழில் வளம் வந்ததோ அவ்வாதி புருசன்
தாள் சரண் அடைந்திடும் உறுதி நீ கொண்டிடு

5. தானெனும் ஆணவம் மோஹமதும்
தள்ளினோர் பற்றெனும் குற்றமிலார்
மோனத்தவம் ஆன்ம நிட்டையிலே
மூழ்கியே ஆசைகள் ஒழித்தவராய்
ஆனந்தம் துயர் எனும் இரட்டைகள்
அகற்றியே அக்ஞானம் தனைவிடுத்தோர்
தானே அழிவிலா நிலைதனை யடைவார்

6. சென்றவர் திரும்பி வருவதில்லை
சூரியன் சந்திரன் அக்கினியும்
நின்றே அதற்கொளி தருவதில்லை
என்றுள இடம் என் பரமபதம்

7. எக்காலத்தும் எனதோர் பகுதி
இவ்வுலகில் சீவன் எனவே தோன்றி
மிக்குள அதனதன் இயல்பில் நிற்கும்
மனம் முதலாம் ஆறு புலன்களை இழுக்கும்

8. காற்று மலர்களின் மணங்களைத்தானே
கொண்டு செல்வதைப் போன்றே சீவனும்
தோற்றம் உடலில் பெறும் வேளையிலும்

தன்னுடல் விட்டே ஏகும் பொழுதிலும்
புலன்களைத் தன்னுடன் கொண்டே செல்கிறான்

9. நாவு, கண், மெய், செவியும் மனமும்
நாசி முதலாம் அனைத்தையும் தன்வயம்
மேவிடச் செய்தவன் விஷயங்கள் தமையே
மிக்கவும் அனுபவம் செய்துமே துய்க்கிறான்

10. உடல்தனை விடுகையில் உடலிலே இருக்கையில்
உலகுள பொருள்களை துய்த்திடும் பொழுதினில்
உடன்உறை குணங்கள் உடன்கூடி இருக்கையில்
உணர்ந்திலார் ஜீவனை மூடர்கள் ஞானக்கண்ணுளோர்
அறிவரே

11. தன்னுள் உறைந்துள ஆன்மாவைத்
தானே முயன்று அறிவார் யோகியர்
என்னதான் முயன்றும் பக்குவம் என்பதே
இல்லாத அறிவிலார் ஆன்மாவைக் காண்கிலார்

12. பரிதி தன்னிடம் இருந்தே வந்து
பாரினை விளக்கும் பேரொளி, சந்திரன்
தருமொளி, அக்கினி தன்னொளி தானுமே
தந்தது நான் எனும் உண்மை உணர்ந்திடு

13. என்னுடை சக்தியால் புவியுள் புகுந்து
இருக்கும் உயிர்களைத் தாங்குகின்றேன்

தன்னுடை இனிய வடிவால் பயிர்களைக்
காத்து வளர்க்கும் தண்மதி ஆகிறேன்

14. உதரக்கனலாய் வைச்வா நரனாய்
உள்ளே இருந்து நால்வகை உணவினை
விதவிதமான காற்றின் துணையுடன்
செரித்திடச் செய்திடும் பணியை முடிக்கிறேன்

15. அனைத்துயிர் உள்ளம் தனிலும் அமர்ந்துளேன்
அருமறை தன்னுளே அறியப்படு பொருள்
என்பதும் நானே. நினைவும் ஞானமே
இவற்றின் அழிவும் என்னிடம் தோன்றிடும்
மறைகளை அறிந்தவன் மறைமுடி புனைந்தவன்
இரண்டும் நானே என்பதும் உணர்ந்திடு

16. க்ஷரன் அக்ஷரன் என்னும் இரண்டு
புருசர் உலகில் உள்ளனர் இவர்களின்
உருவம் கொண்டவர் க்ஷரன் எனப்படுவார்
உருவம் இன்றி நிலைத்தவன் அக்ஷரன்

17. இரண்டு புருசர்க்கும் அன்னியமாக
இருப்பவன் புருசோத்தமன் எனப்படுவான்
பரமாத்மா எனும் பெயரும் கொண்டான்
பரிவுடன் மூன்று உலகையும் தாங்குறான்

18. க்ஷரம், அக்ஷரம் எனும் இரண்டையும் கடந்து
இரண்டிலும் மேலாய் இருப்பதால் எந்தனை
புருசோத்தமன் என்றே உலகும் மறைகளும்
போற்றிடும் புகழ்தனைப் பெற்றவன் நானே

19. மயக்கம் விடுத்துப் புருசோத்தமன் என
மனதினில் எந்தனை அறிபவன் எவனோ
தயக்கம் இன்றி முழு மனதுடன் எனையே
துதிக்கிறான் என்பதை உணர்ந்திடு பாரதா

20. புலப்படாமல் மறைந்துள சாத்திரம்
புகன்றேன் உனக்கு குற்றமற்றவனே
உலகில் இதனை உணர்ந்தவன் அறிஞனாய்
நிலவியே செயல்களும் முடித்தவன் ஆகிறான்

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திர மாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம் பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில் புருஷோத்தம யோகம் என்று பெயர் பெற்ற பதினைந்தாம் அத்தியாயம் முற்றும்.

# ஸ்ரீமத் பகவத் கீதை

## பதினாறாவது அத்தியாயம்

## தெய்வாசுர ஸம்பத் விபாக யோகம்

**ஸ்ரீ பகவான் கூறியது:**

1. எதற்கும் அஞ்சாதிருத்தல், என்றும் உள்ளத்
   தூய்மையுடன்
   ஈகை மிகுந்த நற்குணமும், பொறிகளை அடக்கும்
   திறமையதும்
   நிதமும் நேர்மை, நெறி நடத்தல், ஞானம் யோகம்
   நிலை நிற்றல்
   நற்றவம் யாகம் புரிந்திடுதல் சாத்திரங்கள் பல தான்
   படித்தல்

2. இன்னல் பிறர்க்கு இழையாமை, உண்மை,
   சினமின்மை, துறவறமும்
   என்றும் அமைதி, கோள் சொல்லா இயல்பும்
   உயிர்களிடம்
   நன்னயம், மென்மை, இரக்கமதும், நாளும் மனதில்
   திட்பமதும்
   நாணம், பிறர் பொருள் தன்னில் நாட்டமில்லாத
   நற்பண்பும்

3. தவறிழைத்தோரை மன்னித்தல், தைரியம், தூய்மை,
மனஉறுதி
தானெனும் செருக்கு இல்லாமை, வஞ்சகமற்ற
நற்பண்பு
இவைகளனைத்தும் தெய்வ சம்பத்துடன் தோன்றிடும்
மனிதருக்கு
இயல்புகளாக அமைந்திருக்கும் என்பதை அர்ச்சுனா
நீ உணர்வாய்

4. பகட்டு, இறுமாப்பு, தற்பெருமை, சினம், கடுமை,
அறியாமை
உகந்த இயல்புக ளெனஅமையும்
அசுரசம்பத்துடையோர்க்கே

5. வீடு தன்னை அருளுவது தெய்வ
சம்பத்தென்பதையும்
பிறவியும் மரணமும் தரும்பந்தம்
அசுரசம்பத்தென்பதையும்
ஈடிலா பாண்டவா அறிந்து கொள்வாய் எனினும்
அஞ்சாதிருந்திடுவாய்
ஏனெனில் தெய்வ சம்பத்துடனே பிறந்தவன் நீ என
உணர்வாய்

6. இரு வகைப்பிறப்புகள் இவ்வுலகில்
தெய்வ இயல்பும் அசுர இயல்புமவை
ஒரு வகையாம் தெய்வத்தன்மைதனை
உனக்கு முன்பே வரித்துரைத்தேன்

மறுவகையாம் அசுரத்தன்மைதனை
மனம் கனிந்துரைப்பேன் கேள் பார்த்தா

7. செய்யத்தகுந்த நல்வினையும், விலக்குதற்குரிய தீவினையும்
சிறிதும் அறியாதிருப்பவரே அசுர இயல்புடன் பிறந்தவர்கள்
பொய்யும் அசுத்தமும் நிறைந்திருப்போர்
பெருமை தரும் நன்னடத்தையிலார்

8. நிலையில்லாத இவ்வுலகம் பொய்யே நிறைந்தது என்றிடுவார்
உலகம் பிறந்தது காமத்தால் ஆண் பெண் சேர்க்கையினா லென்பார்
அலகிலா உலகில் இறைவன் இலையென்றும் அவர் கூறிடுவார்
இருப்பது வேறு என்ன வென்றும் இவர்கள் ஏசிப் பேசிடுவார்

9. அற்ப மதியுடன் கூடியவர் இவ்வெண்ணம் தனைக்கை கொண்டவராய்
ஆன்ம நெறிதனைத் தானிழந்து கொடிய நெறியினைக் கடைப்பிடித்து
பற்பல தீய தொழில் புரிந்து உகின் எதிரிகளாய் வாழ்ந்து
பாரினை நாசம் புரிந்திடவே புவியில் வந்து தோன்றுகிறார்

10. ஆசைகள் நிறைவேறாதவராய் ஆடம்பரம்
தற் பெருமையுடன்
நாசம் தரும் தீய எண்ணங்கள் நாளும் கொண்டே
மதம்பிடித்து
மயக்கத்தால் கெட்ட விரதங்களை மனதில்
கொண்டு செயல்புரிவர்

11, 12 இறக்கும் வரையில் அளவு கடந்த கவலையுடை
யோராய்
எல்லாவற்றிலும் காமம் ஒன்றே மேலாம்
எண்ணமுடன்
இருப்பது வேறு எதுவும் இல்லை என்ற
மனத்தினராய்
எண்ணிக்கையிலா ஆசைக்கயிறுகள் தம்மால்
கட்டுண்டு
ஆசை கோபம் என்ற இரண்டு மனநிலை வசமாகி
ஆசையால் விளையும் போகங்கள் அடைந்திடச்
செல்வம் தேடிடுவார்

13, 14, 15, 16

இதனை இன்று அடைந்தேன் நான்
இன்னும் பலதை அடைந்திடுவேன்
எந்தன் ஆசைகள் நிறைவேறும்
பகைவன் இவனைக் கொன்றேன் நான்
பலரை மேலும் கொன்றிடுவேன்
பிரபுவாய் இன்பம் துய்க்கின்றேன்

பலமும் சுகமும் கொண்டவன் நான்
பலபல காரிய சித்திகளும்
பெற்றவன் செல்வம் படைத்தவனாய்
பெருமை மிகு உயர் குலத்தவனாய்
மற்றவர் எவரும் நிகரில்லையென
மகிழ்வடைவேன் வேள்வி புரிந்திடுவேன்
மனம் கனிந்தே தானம் தந்திடுவேன்
என்றே அறியாமை தனில் மயங்கி
எண்ணங்கள் தம்மால் குழம்பியவர்
மோக வலையில் சிக்குண்டு
போகங்களில் பற்று மிகுந்தவராய்
பாழ்நரகில் இவர் வீழ்கின்றார்

17. தம்மைத்தாமே புகழ்ந்திடுவார்
செல்வச் செருக்கும் மதமுமுளார்
பகட்டுக்காக வேள்விகளைப்
புரிவர் நெறிகள் தமை மீறி

18. தானெனும் ஆணவம் இறுமாப்பு
தேகபலம் ஆசை சினம் கொண்ட
மானுடர் இவர் தங்கள் உடல்களிலும்
மற்றவர் உடலிலும் உறையும் எனை
வெறுத்தவமானம் புரிகின்றார்

19. வெறுப்பு மிகுந்தோர், கொடியவர்கள்,
கடையர், இழிந்தோர் என வாழும்
பிறவிகளை அசுரப்பிறவிகளாய்
திரும்பத் திரும்பத் தள்ளுகின்றேன்

20. மூடர்கள் பல பிறப்புகளில்
அசுர யோனியை அடைந்தவராய்
நாடியே என்னை அணுகாமல்
கேடுள தாழ்நிலை அடைகின்றார்

21. ஆன்ம நாசம் விளைவிக்கும்
காமம், கோபம், லோபமெனும்
மூன்று வகை நரக வாயில்களை
முனைந்தே ஒதுக்கித் தள்ளிடணும்

22. இருள் நிறைந்த இவ்வழிகள் விட்டு
ஏகிய மனிதன் தன் நலம் தன்னை
கருத்துடன் புரிந்து உயர்ந்ததுவாம்
முக்தி நிலை தன்னை அடைகின்றான்

23. அரிதாம் சாத்திர நெறி விடுத்து
ஆசை வாய்ப்பட்டு வினையாற்றல்
புரிபவன் பூரணத்தன்மையும் இன்பமும்
உயர்கதி தானும் அடைவதில்லை

24. செய்யத்தக்கது எதுவென்றும்
செய்யத்தகாதது எதுவென்றும்
ஐயம் தீர்ந்து நீ நிச்சயிக்க
சாத்திரம் பிரமாணம் என்றறிந்து
சாத்திர நெறிப்படி தொழில் செய்வாய்

இங்ஙனம் பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திர மாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் சம் பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில் தெய்வாசுர ஸம்பத் விபாக யோகம் என்று பெயர் பெற்ற பதினாறாம் அத்தியாயம் முற்றும்.



# ஸ்ரீமத் பகவத் கீதை

## பதினேழாம் அத்தியாயம்

## சிரத்தாத்ரய விபாக யோகம்

அர்ஜுனன் கூறியது:

1. சாத்திர விதிகளை மீறிடினும்
சிரத்தையுடன் பூசை புரிபவர்கள்
சாத்வீகம் ராஜஸம் தாமஸத்தில்
சேர்வது எவ்வகை? சொல் கண்ணா

ஸ்ரீ பகவான் கூறியது:

2. மானிட தேகம் கொண்டவர்கள்
மனதில் இயல்பாய் உள சிரத்தை
தானே சத்துவ ராஜஸ தாமஸமாம்
மூன்று வகைகள் அதனைக் கேள்

3. பாரதா! ஒவ்வொரு மனித மனம்
பாங்கினில் சிரத்தை தானமையும்
பாரினில் தோன்றிய மனிதரெல்லாம்
சிரத்தை மயமே ஆனவர்கள்
சிரத்தை எவ்வகை மனிதர் அவ்வகை

4. சாத்துவிகர் தேவரை வணங்கிடுறார்
ரஜோ குணத்தார் யக்ஷர் ராக்ஷஸரை
தாமஸ மனிதர் பூதப்ரேதங்களைத்
தாமே வணங்கிப் போற்றிடுறார்

5, 6 அஹங்காரம் வீண் ஆடம்பரத்துடன்
ஆசை, பற்றுதல் இரண்டிலும் வலுத்து
நிகரில்லாத சாத்திர நெறிகளை
நீக்கித் தமது பொறி புலன் வருத்தித்
தங்கள் உள்ளத்துறையும் எனையும் வருத்தி
கடுந்தவம் புரிவோர் அசுர நெறியில் துணிந்தவர்

7. அவரவர் விரும்பும் உணவும் மூவகை
அரிதாம் வேள்வியும் தவமும் தானமும்
அவ்வணம் மூன்று வகையில் அமைந்தன
அவைகளில் இருக்கும் வேற்றுமை தனைக்கேள்

8. ஆயுளும், அறிவும், பலமும், ருசியும்
ஆரோக்கியம் சுகம் அனைத்தையும் வளர்க்கும்
நேயமாய் இன்பமும் வலிவும் தந்திடும்
ரசையும் பசையும் கொண்டிடும் உணவுகள்
சாத்வீகர் தமக்குப் பிரியம் தருபவை

9. கசப்பும், புளிப்பும், உவர்ப்பும், வெப்பமும்
காரமும் வறட்சியும் எரிச்சல் மிக்கதும்

இசைவிலாத் துன்பமும் நோயும் ஈந்திடும்
இயல்புடை உணவுகள் தம்மையே விரும்புவர்
என்றும் ரஜோ குணமுடைய மாந்தரே

10. காலம் கடந்ததாய் சுவைதனை இழந்ததாய்
கடுமையான துர்நாற்றமெடுப்பதாய்
மேலும் பழையதாய் எச்சிலாய், தூய்மையற்றதாய்
அமைந்துள உணவுகள் தமோ குணத்தாரதே

11. வினைப்பயன் தன்னை விரும்பாதவராய்
வேள்வியை ஆராதனை எனவே புரிந்திடும்
நினைவுடன் சாத்திர நெறியில் செய்வேள்வி
தனக்கிணையில்லா சாத்விக வேள்வியாம்

12. பயனை விரும்பியோ, பகட்டினைக் காட்டவோ
புரிந்திடும் வேள்வி ராஜஸமென்பதைப்
பரத குலத்தின் தூயவா புரிந்து கொள்

13. அருமறை நெறி தன்னை வழுவியிருப்பதும்
அன்னதானம் என்பதிலாததும்
சிரத்தை தட்சிணை மந்திரமற்றதாய்
செய்திடும் வேள்வி தாமஸமென்றது

14. தேவர் அந்தணர் குருக்கள் ஞானிகள்
தம்மைப் பணிவுடன் வணங்கித்துதிப்பதும்
யாவரும் மதித்திடும் தூய்மையும் நேர்மையும்

இன்னல் செய்யாமையும் பிரம்மச் சரியமும்
இவையெலாம் தேகம் செய்யும் தவங்களாம்

15. துன்புறுத்தாததும், வாய்மையும், நலமதைத்
தந்திடும் இயல்பு கொண்டதும் இனியதும்
என்பதாய் இருந்திடும் வாய்ச்சொல் தன்னுடன்
மறைதனை ஓதலும் வாய்மொழித்தவம்

16. அமைதியும், அன்பும், மௌனம் தன்னடக்கமும்
தூயதாம் நோக்கமும் கொண்ட ஓர் நிலை தான்
அமைந்திடில் அதுவே மனதினால் செய்தவம்

17. பயனை விரும்பாது யோகத்தில்
பற்றும் உறுதியும் பெற்றவராய்
அயராது புரியும் இம்மூவகையாம்
அரிய தவம் சாத்வீகம் எனப்படுமே

18. பாராட்டுதலும் போற்றுதலும்
பெருமை தனையும் எதிர்நோக்கி
ஊரார் மெச்சிடச் செய்தவமோ
உறுதியும் நிலையும் அற்றதுவாம்
உலகோர் ராஜஸம் என உரைப்பர்

19. தன்னை மிகவும் துன்புறுத்தியோ
தவறான மூடக் கொள்கைகளால்
இன்னலும் நாசமும் பிறர் பெறவோ
இயற்றும் தவமது தாமஸமாம்

20. தான் பெற்ற உதவிக்குக் கைமாறிலாததும்
தானம் செய்வது முறையெனும் கருத்துடன்
மூன்றாம் இடம் வேளை பாத்திரம் தக்கதாய்
ஈந்திடும் தானமே சாத்விக தானமாம்

21. திரும்பப் பெறுதலை மனதில் கருதியோ
தானம் செய்வதின் பயனை விரும்பியோ
வருத்தத்துடனே வழங்கிடும் தானம்
ராஜஸ தானம் எனவே எண்ணுவார்

22. இடமும் காலம் பாத்திரமும்
ஏதும் தகுதி இல்லாததுவாய்
கொடுக்கையில் வணங்கா திகழ்ச்சியுடன்
கொடுக்கும் தானம் தாமஸமாம்

23. பிரமம் 'ஓம் தத்ஸத்' என்று
பெரியோர் மூவிதமாய் மொழிந்தார்
மறைகள் அந்தணர் வேள்வியதும்
மேதினி வந்தது அதனாலே

24. வேதமறிந்தவர் வேத நெறிப்படி
வேள்வி தானம் தவத்தை ஓமென
ஓதியே தொடங்கிப் புரிந்திடுறார்

25. பலபல வேள்விகள் தவமும் தானமும்
பயன் கருதாது முக்தி நாடுவோர்

உலகில் பிரமம் குறிக்கும் 'தத்' எனும்
உயரிய சொல்லை உரைத்துப் புரிகிறார்

26. 'உண்மை' நன்மை எனும் பொருள் குறித்தே
உயரிய 'ஸத்' எனும் சொல்லை உரைக்கிறோம்
மண்ணில் செய் மங்கலச் செயல்களிலெல்லாம்
'ஸத்' எனும் சொல்லை உரைக்கிறார் அருச்சுனா

27. யாகத்தில், தவத்தில், தானத்தில்
என்றும் நிலைத்தது 'ஸத்' எனும் சொல்
ஏகமாம் பிரமம் தனைக்குறித்து
இயற்றும் கருமமும் 'ஸத்' என்பார்

28. சிரத்தையிலாது செயும் வேள்வி
தானமும் தவமும் கருமங்களும்
மறுமைக்கும் இம்மைக்கும் உதவாது
அருச்சுனா அவைதான் 'அஸத்' எனப்படுமே

இங்ஙனம், பிரம்ம வித்தையாயும், யோக சாஸ்திரமாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் சம்பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில் சிரத்தாத்ரய விபாக யோகம் என்று பெயர் பெற்ற பதினேழாம் அத்தியாயம் முற்றும்.

# ஸ்ரீமத் பகவத் கீதை

## பதினெட்டாம் அத்தியாயம்

## மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அர்ச்சுனன் கூறியது:

1. இந்திரியங்கள் தமக்கிறைவா!
இணையில்லா தோள் வலிவுடையோய்
எந்தன் மனம் நன்கு தெளிவுறவே
துறவறம் தியாகம் இரண்டுடைய
அந்தமிகும் தத்துவம் தனித்தனியாய்
அறிந்திடவே நான் விரும்புகிறேன்
அரக்கன் கேசியை மாய்த்தவனே!
அதனை எனக்கு எடுத்துரைப்பாய்

ஸ்ரீ பகவான் கூறியது:

2. பயன்கள் வேண்டிச் செய் கருமம்
துறப்பது துறவறம் என்பர் ஞானியர்
பயன்களே வேண்டாம் என எண்ணும்
பண்பே தியாகம் என்பர் பெரியோர்

3. குற்றம் உடையவை கரும மெல்லாம்
கொஞ்சமும் கொள்ளாது துறந்திடுவோம்

கற்றவர் சிலர் சொல்லும் வார்த்தையிது
கொடையும் தவமும் வேள்வி எனும்
கருமங்கள் துறந்திட வேண்டாம் என
கற்றவர் வேறு சிலர் உரைப்பார்

4. பரத குலத்துப் பெருமகனே!
புருஷருள் புலியே! நான் கண்ட
பெரிதாம் தியாகம் தன் வகைகள்
இருப்பது மூன்று அதை உரைப்பேன்

5. கொடையும் வேள்வியும் தவம் என்ற
கருமங்கள் விடாது செயல் வேண்டும்
கொடை, வேள்வி, தவம் மூன்றும்
கற்றோர்க்குப் புனிதம் வழங்கி விடும்

6. பார்த்தா, இந்தக் கருமங்களும்
இவை போலிருக்கும் கருமங்களும்
பற்றும் பயனும் அற்றதுவாய்ப்
புரிந்திடல் வேண்டும் என்பதுவே
அறிந்திடு எந்தன் கொள்கையென

7. நித்திய கருமம் தனை என்றும்
நீக்கித் துறப்பது பொருந்தாது
புத்தியற்று இச்செயல் புரிந்தால்
புகல்வர் தாமஸம் இதுவென்று

8. உடலை வருத்தும் என அஞ்சி
துக்கம் எனவே கருமம் தனை
விடுபவன் ராஜஸதியாகம் தனைச்
செய்கிறான் தியாக பயன் அடையான்

9. செய்தற்குரிய நித்ய கருமமதைச்
செய்கையில் பற்றும் பயனுமறச்
செய்பவன் சாத்வீக தியாகம்தனைச்
செய்கிறான் என்று அறிந்திடு அர்ச்சுனா

10. சத்துவம் நிறைந்த பேரறிஞன்
சந்தேகம் தனை அகற்றியவன்
உத்தமத் தியாகி துன்ப வினை
வெறுத்திடான் இன்ப வினை விரும்பான்

11. உடலமெடுத்தவன் கருமங்களை
விடுவதென்பது இயலாது
விடுவேன் என்று வினைப்பயனை
விட்டவன் தியாகி எனப்படுவான்

12. இன்னாதது இனியது என இரண்டும்
இரண்டும் கலந்தது என ஒன்றும்
என்னும் இம்மூன்று வினைப் பயன்கள்
இறந்த பின் பெறுபவர் தியாகியலர்
சிறந்த தியாகிகள் தமக்கென்றும்
இறந்த பின் இவ்வினைப் பயன்களில்லை

13. கருமத்தின் முடிவு தனைக் காட்டும்
சாங்கிய சாஸ்திரம் எனும் நூலில்
உரைத்துள காரணம் ஐந்தினையும்
பெருந்தோளா! நான் புகன்றிடுவேன்

14. இருப்பிடம் எனவே உள உடலும்
இந்திரியங்கள் அத்தனையும்
கருமம் புரியும் கர்த்தாவும்
கணக்கில்லாத செயல் வகைகள்
கடவுளும் ஐந்தாம் காரணமாம்

15. மெய் மொழி மனதால் ஒரு மனிதன்
முறையாக, முறை தவறியதாய்
செய்யும் எந்தச் செயலுக்கும்
செப்பிய ஐந்தே காரணமாம்

16. முழு முதற் பொருளாம் ஆன்மாவைச்
செய்கை புரியும் கர்த்தா வாய்ப்
பழுதாய் எண்ணிடும் தெளிவிலா புத்தி
படைத்த அறிவிலி உண்மை காண்கிலான்

17. செய்பவன் நான் எனும் எண்ணமே இன்றிச்
சிறிதும் பற்றிலா புத்தியும் கொண்டவன்
வையகத்தாரையே கொன்றிட நேரினும்
கொன்றவன் ஆகான் தளைகளில் சிக்கிடான்

18. அறிவு, அறியப்படுவது, அறிபவன்
கருமம் தோன்றிட மூவகைக் காரணம்
கருமத்தின் மூன்று இருப்பிடம் யாதெனில்
கருவி கருமம் கர்த்தா என்பவை

19. குணங்களின் வேறுபாடுகளைக்
கூறிடும் சாங்கிய சாத்திரத்தில்
குண வேற்றுமைகள் உள்ளதனால்
கருமம் கர்த்தா ஞானமும்தான்
தனித்தனி மூவகை என உரைத்ததனை
இனி நான் புகல்வேன் கேட்டிடுவாய்

20. வெவ்வேறாயுள்ள பொருள்கள் அனைத்திலும்
வேறுபாடுகளும் அழிவெனும் தன்மையும்
எவ்வகையிலும் இல்லாதிருக்கும்
சத்துவைப் பார்க்கும் ஞானமே சத்துவம்

21. உடல்களைத்திலும் தனித்தனி ஆன்மா
உள்ளது எனவே உணர்ந்திடும் அறிவினைத்
திடமுடன் ராஜஸ ஞானம் எனபதைத்
தெளிவுடன் தெரிந்து கொள்வாய் அர்ச்சுனா

22. தெய்வச் சிலையே தெய்வம் என்றும்
தேகமே ஆன்மா என்ற முடிவும்
மெய்க்குப் பொருந்தா, யுக்திக் கொவ்வா
சிற்றறிவே தாமஸ ஞானம் என்றிடுவார்

23. விருப்பம் விளைவினில் வைக்காது
விருப்பும் வெறுப்பும் பற்றுமின்றி
புரிய வேண்டிய செயல்கள் தம்மைப்
புரிந்திடில் அவைகள் சாத்வீகம்

24. ஆசை வசப்பட்ட நிலைதனிலோ
அல்லது நானெனும் ஆணவமோ
மாசுள இக்குணம் பிரயாசையுமே
மீசுறச் செய் செயல் ராஜஸமாம்

25. வினையின் விளைவும் இழப்புகளும்
வேறுள துன்பமும் தன் திறனும்
நினைத்தே பாராது மயக்கத்தில்
புரியும் செயலே தாமஸமாம்

26. பற்றுகள் அகங்காரம் எனுமிரண்டும்
அற்றவன்; உறுதியும் ஊக்கமுடன்
வெற்றி தோல்வியில் மாறுபடா
வித்தக கர்த்தா சாத்துவிகன்

27. ஆசை மிகுந்தவன் பயன் விரும்பும்
உலோபி பிறரைத் துன்புறுத்தும்
மாசுளன் தூய்மையிலான் பயனில்
மகிழ்வும் சோர்வும் கொண்டிருக்கும்
கர்த்தா ராஜஸன் எனப்படுவான்

28. யோகத்திற்கு ஒவ்வா மனமுடையோன்
முரடன், அறிவு வளராதான்
தேகத்தால் உழைக்கா சோம்பேறி
துயர் உறுவோன், வஞ்சகன், பழிகாரன்
காலத்தின் பெருமை அறியாத
கர்த்தா தாமஸன் எனப்படுவான்

29. புத்தி, மன உறுதி இவை இரண்டின்
குணங்கள் தனித்தனி மூன்று வகை
இத்தகை வேற்றுமை அத்தனையும்
இயம்புவேன் முழுதும் தனஞ்ஜயனே

30. பிரவிருத்தி நிவிருத்தி எனுமிரண்டும்
புரியத்தகுந்ததும் தகாததுவும்
பயமும் பயமிலாத் தன்மையதும்
பந்தமும் மோட்சமும் அறிவது சத்துவம்

31. தருமம் அதருமம் எவை என்றும்
தகுந்த செயல் தகாததெதுவென்றும்
முறை தவறித் தாறுமாறாக
அறியும்புத்தி ராஜஸமே

32. அறியாமை இருளால் மறைந்திருக்கும்
அறிவோ மறத்தை அறமென்றும்
பொருள்களை விபரீத நெறிதனிலே
புரிந்துகொள்ளும் அதுவே தாமஸமாம்

33. முறை பிறழாத எந்த உறுதியால்
மனது பிராணன் பொறி புலன்கள்
நிறைவுறச் செய்யும் தொழில்கள் தம்மை
யோகம் காக்கு மவ்வுறுதியே சாத்விகம்

34. அறம் பொருள் இன்பம் எந்த உறுதியால்
அனுதினம் காத்திடப்படுகின்றதோ
சிறந்த நற்பயனை ஆழ்ந்த பற்றினால்
விரும்புகின்றதோ அவ்வுறுதியே ராஜஸம்

35. அறிவிலியான ஒருவன் எவ்வுறுதியால்
அச்சம் துயரம் தூக்கம் செருக்கு
தறிகெட்ட மனக்குழப்பம் தனையும்
தானே விடானோ அவ்வுறுதியே தாமஸம்

36, 37 பரத குலத்து ஏறே! சுகமும் மூவகை
பகர்வேன் அதனை எதனைப்பழகி
அரிய இன்பம் அடைந்து துயரின்
இறுதி நிலையை எய்துகின்றானோ

முதலில் விடமென முடிவில் அமுதமாய்
மதியும் ஆன்மாவில் நிலை பெற்றதுவாய்
இதம் தரும் தெளிவாய்த் தெரிகின்றதோ
அதுவே சாத்துவீக சுபம் என்பதுவாம்

38. புலன்களும் பொறிகளும் கூடிடும் இன்பம்
அமுதமாய் முதலில் முடிவில் விஷமென
புலப்படும் நிலையினில் உள்ளதோ அதுவே
ராஜஸ சுகம் என கருதிடப்படுமாம்

39. நித்திரை சோம்பல் தடுமாற்றம் இவை
தரும் சுகம் முதலிலும் முடிவிலும் அறவினை
மெத்தவே மயக்கிடும் அத்தகை சுகமே
தாமஸ சுகம் எனத்தான் அழைத்திடுவார்

40. இயற்கை தரும் முக்குணங்களை விட்டு
ஏகிய ஓர் உயிர் மண்ணுலகத்திலோ
முயன்று தேடினும் தேவர்கள் தம்மிலும்
இல்லை என்பதே உண்மை என்றறிந்திடு

41. பகைவரை எரித்திடும் அருச்சுனா உலகினில்
வருணங்கள் நான்கினில் பிறந்தவர் தமக்கெலாம்
வகைகளுக்குரியதாய் குணங்களுக்குற்றதாய்
அமைந்திடும் அவரவர் கருமங்கள் அறிந்திடு

42. அந்தக் கரணம் புறக்கரணங்கள் தமையும்
அடக்குதல், தவம், தூய்மை, நேர்மை
எந்தப் பொழுதிலும் பொறுமை ஞானவிக்ஞானம்
இறைபக்தியுடன் சேர்ந்ததந்தணர் செயல்களாம்

43. சூரத்தன்மையும், துணிவும், உறுதியும்
சாதுரியமும், கொடையும் இறைமையும்

போரில் புறமே காட்டாப் பண்பும்
சேர்ந்ததே க்ஷத்திரிய கருமங்களாகும்

44. உழவும், கால்நடை பேணுதல், வாணிபம்
உயர் தொழில் இவையெலாம் வைசி கர்மாம்
அழகுறப் பிறர் சொலும் பணிகள் ஆற்றுதல்
அமைந்திடும் நாலாம் வருணத்தின் கருமமாய்

45. அவனவன் கருமம் தனியே களிப்புறும்
அன்னவன் நிறை நிலை தன்னை அடைகிறான்
தத்தம் கருமம் தனியே கருத்தினை
வைத்தவன் நிறைநிலை எப்படி அடைகிறான்?
என்பதை எடுத்தே உரைப்பேன் கேட்டிடு

46. எவனால் அனைத்தும் உலகில் உதித்ததோ
இவ்வுலகம் முழுவதும் எவன் நிறைந்துளனோ
அவனைத் தன் சுய கருமத்தால் நிதம்
ஆராதனை செயும் மனிதன் உயர்கிறான்

47. பாங்கற்ற தாயினும் தன்னுடை கருமம்
பாங்குள பிறனுடை கருமம் தன்னிலும்
ஓங்கி நிற்கும் அத்தகை கருமம் புரிபவன்
தீங்கினை நிச்சயம் என்றும் அடைந்திடான்

48. குந்தியின் மைந்தா! தன்னுடை கருமம்
குறையுடன் கூடியதாக இருப்பினும்

எந்தப் பொழுதிலும் கைவிடல் நன்றிலை
ஏனெனில் புகையால் சூழ்ந்திடும் தீயென
இருக்கும் குறைகள் கருமங்கள் தம்முடன்

49. பற்றுகள் என்றும் அடையாத புத்தியும்
பலபல ஆசைகள் தம்மை ஒழித்தும்
வெற்றி கொண்டே சிந்தை தன்னை அடக்கியோன்
வினையொழி நிலை அடை துறவியாகிறான்

50. குந்தியின் மைந்தா! அன்னிலை அடைந்தவன்
குறைவிலாப் பேரறிவின் உயர் நிலை
அந்த மிகுத்திடும் பிரமம் தன்னையே
அடைந்திடும் நெறிதனை சுருங்கக் கூறுவேன்

51, 52, 53

தூய அறிவு, திடத்துடன் மனம், உடல்
தம்மை அடக்கி ஒலி முதலான
ஆய நுகர்ச்சிகள் அனைத்தும் ஒழித்து
ஆசை, வெறுப்புகள் தம்மையும் விடுத்து
தனிமையை நாடி, உண்டி சுருக்கி
மனம் மொழி காயம் தன்னை அடக்கி
அனவரதம் தியான யோகம் தனிலே
ஆழ்ந்தவனாய் வைராக்கியம் பூண்டு
நானெனும் ஆணவம் ஆசையின் பலமும்

செருக்கு, சினம், உடைமை உணர்வும்
தானெனதென்னும் எண்ணம் அகற்றி
அமைதியுற்றவன் பிரமம் ஆவதற்குரியோன்

54. பிரம ஞானத்தில் உறுதி பெற்றிருப்பவன்
தெளிந்த மனம் உடைத்தவன் ஆகி
வருத்தம் வேட்கை இரண்டும் விடுத்து
அனைத்துயிரும் சமம் எனவே கருதி
அளவிலா பக்தி என்பால் அடைகிறான்

55. பக்தியினால் என்னை யார் என்றறிந்து
எத்தன்மையினன் நான் என்பதும் உணர்ந்து
சத்தியமாம் அன்னிலை தனை அறிந்த பின்
பக்தனவன் என்னை விரைவில் அடைகிறான்

56. கருமங்கள் அனைத்தையும் எப்பொழுதும்
புரிபவன் எனினும் என்றெனை அணுகிச்
சரணம் அடைந்திடில் நித்தியமானதும் நிலை பேறுடைய
ரெும்பதம் தனை என் அருளால் அடைகிறான்

57. பகுத்தறிவால் செயல்கள் அனைத்தும் என்னிடம்
சமர்ப்பணம் செய்து என்னையே இலக்காய்
உகந்த நெறியெனக் கொண்டு புத்தி
யோகம் கைக் கொண்டே சித்தம் என்னிடம்
நிலையாய் நிறுத்திய நிலையினை அடைவாய்'

58. என்னிடம் சித்தம் தனை வைத்து
என்னருளால் எல்லாத் தடைகளையும்
நன்னயமாய் நீ தாண்டிடுவாய்
நானெனும் ஆணவத்தால் என்சொல்
கேளாவிடில் நீ அழிந்திடுவாய்

59. அகங்காரம் தனைக் கைக்கொண்டு
'அமர் புரியேன்' என நீ நினைத்தால்
அகம் தனில் கொண்ட இவ்வெண்ணம்
பொய்யாய் ஆகி உன் இயல்பு
அமர் புரிந்திடு என உனை ஏவிடும்

60. மோஹத்தால் எதனைச் செய்திடவே
மறுத்தனையோ அச்செயல் தனையே
தேகத்துடன் பிறந்த உன் இயல்பதனால்
உன் வசமிழந்தே நீ புரிந்திடுவாய்

61. உடல் என்னும் இயந்திரம் தனில் எல்லா
உயிர்களை ஏற்றி ஈசன் மாயையால்
உடல்களின் உள்ளங்கள் தனில் இருந்து
உயிர்கள் அனைத்தையும் சூட்டுகிறான்

62. அவனை எல்லா வகையிலும் பாரதா!
அடி பணிந்தே அவன் அருளால் உயர்ந்ததாம்
உவமையிலா சாந்தியும் உயர்ந்த பதவியாம்
வீடெனும் நிலைத்ததாம் பேற்றினைப் பெற்றிடு

63. மறை பொருட்கெல்லாம் மறை பொருளாய்
நிறைந்துள ஞானம் தனை நானும்
உரைத்துளேன் முற்றிலும் ஆராய்ந்தே நீ
உகந்ததாய் உணர்வதைப் புரிந்திடுவாயே

64. ரஹஸ்ய மொழிகளில் மேலாம் மொழியை
உரைத்திடும் என்சொல் திரும்பவும் கேட்டிடு
பார்த்தா! உனக்கு நலம் தரும் மொழியதைப்
புகலுவேன் சிறந்த ஓர் நண்பன் நீ என்பதால்

65. என்பால் உன் மனம் தனை வைத்து
என்னிடம் பக்தி பூண்டவனாய்
என்னை ஆராதித்திடுவாய் நீ
என்னை வணங்கு என்னை அடைவாய்
என்றும் உறுதி மொழி அளிப்பேன்
ஏனெனில் எனக்கு இனியவன் நீ

66. அத்தனை தருமங்கள் தமை விடுத்தென்
அடியிணை மட்டும் சரண் அடைவாய்
அத்தனை பாவங்கள் உன்னைவிட்டு
அகன்றிடச் செய்வேன் வருந்தாதே

67. தவமிலான் சிறிதும் பக்தியிலான்
தொண்டு செய்யாதான் எனை இகழ்ந்திடுவோன்
இவர்களுக்கெந்தன் அறிவுரைகள்
எடுத்தே என்றும் நீ இயம்பாதே

68. ஆழ்ந்ததாம், இந்த தத்துவத்தை என்
அடியார்க்குரைத்து என்னிடம் பக்தியுடன்
வாழ்ந்திடும் மனிதன் ஐயமின்றி
வந்தெனை அடைவான் அறிந்து கொள்வாய்

69. எவனும் அன்னவன் தனைவிட என் மனம்
இன்புறும் செயல்தனைச் செய்வது இல்லை
அவனை விட எனக்கினியவன் யாரும்
அவனிதனில் இல்லை என்பதும் அறிந்து கொள்

70. அறம் மிகுந்திருக்கும் நம் உரையாடல்
அறிந்ததனை மேலும் கற்றறிபவனே
அறிவெனும் வேள்வியால் எனை ஆராதிக்கிறான்
அறிவாய் எந்தன் கொள்கை ஈதென

71. சிரத்தையும் அவமதிப்பின்மையும் கொண்டெவன்
உரையிதைக் கேட்பதாகினும் செய்திடின்
நிரம்பப் புண்ணியம் செய்தவர் அடைந்திடும்
நல்லுலகங்களைத் தானடைந்திடுவான்

72. ஒருமை மனதுடன் பார்த்தா! நீயும்
உரையிதைச் செவி மடுத்தனையா?
அறியாமை எனும் மயக்கமும் அழிவினை
அடைந்ததா? பகர்ந்திடு அன்பா தனஞ்ஜயா

அர்ச்சுனன் கூறியது:

73. அச்சுதா! மயக்கம் அழிந்தது உந்தன்
அருளால் நல்ல நினைவும் வந்தது
நிச்சயம் ஐயங்கள் அகன்றன உங்கள்
நல்லுரைப்படி உறுதி கொண்டே நடப்பேன்

ஸன்ஜயன் கூறியது:

74. இவ்வண்ணம் வாசுதேவர் மகாத்மா
என்றுள பார்த்தன் இருவர்க்கிடையே
செவ்வை மிகுந்ததும் மயிர்கூச்சதனைச்
செய்திடும் அற்புத உரையாடல் கேட்டேன்

75. வேத வியாஸர் திருவருளால் நான்
மேலாம் ஆழ்ந்த யோகம் இதனை
நாதன் யோகேசுவரனாம் கண்ணனே
நவின்றிட நேரில் கேட்டனன் ஐயனே

76. கேசவார்ச்சுனர் நிகழ்த்திய புண்ணியக்
கலந்துரையாடலின் வியப்பினை நினைத்து
மீசுறும் மகிழ்ச்சி என்னும் உணர்வினில்
மீண்டும் மீண்டும் மகிழ்கிறேன் வேந்தனே

77. அரசே அந்த ஹரியின் அதிசய
வடிவம் தன்னை எண்ணி எண்ணியே
பெருவியப்படைந்தேன் மேலும் மேலும்
பரவசமதனை அடைந்தேன் நானும்

78. எங்கே யோகேச்வரனாய் விளங்கும் கண்ணனும்
    வில்லினை ஏந்திய பார்த்தனும் உளரோ
    அங்கே திருவும் வெற்றியும் மங்கலப் பெருக்கும்
    நிலைத்த நீதியும் விளங்கிடும் என்பதே
    எந்தன் கொள்கை என்பதை உணர்வீர்

இங்ஙனம் வியாஸர் அருளிய நூறாயிரம் சுலோகம் நிறைந்த மஹா பாரதத்தில் பீஷ்ம பருவத்தினிடை பிரம்ம வித்தையாயும் யோக சாஸ்திரமாயும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அருச்சுனனுக்கும் சம்பாஷணையாயும் விளங்கும் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உபநிஷத்தில் மோட்ச ஸன்யாஸ யோகம் என்று பெயர் பெற்ற பதினெட்டாவது அத்தியாயம் முற்றும்.



# ஸ்ரீமத் பகவத் கீதையின் பெருமை

சௌனகர் கூறியது:

1. முன்னர் நாராயணத்தலத்தில் முனிவர் வியாஸர் கூறியதாம்
பன்னரும் பகவத் கீதையதன் பெருமை தன்னை அவ்வணமே
என்னால் தெளிவுற அறியும் வகையினில்
எனக்குரைப்பீர் ஸூத மாமுனியே

ஸூதர் கூறியது:

2. யாரும் அறியா ரஹசியமாய் என்றும் விளங்கும் அப்பொருளை
நீரே வேண்டிக் கேட்டதையே நிச்சயம் மங்களகரமென்பேன்
பாரில் மிகவும் மேலான பகவத்கீதை மேன்மையினை
யாரே எடுத்து உரைப்பதிலே வல்லவராக விளங்கிடுவார்?

3. கண்ணனே அதை முற்றும் தானறிவான்
காண்டீபனும் சிறிது அதன் பயன் அறிவான்
அண்ணல் வியாஸர், சுகமுனி, ஜனகர் தம்முடன்
அறிஞர் யாக்ஞவல்கியருமே அதனை அறிந்தவர்
என்றிடுவேன்

4. மற்றவர் எல்லாம் பிறரிடம் கேட்டு
மஹிமையில் சிறிதே உரைத்திடுவார்
நற்றவர் வியாஸர் திருவாய் மலர்ந்து
நல்கியதில் சிறிதை உரைத்திடுவேன்

5. கோரமாம் பயங்கர ஸம்ஸாரமெனும்
கடல் கடந்திட விரும்பும் மனிதனவன்
நாரணன் கண்ணனாய் உரைத்த நற்கீதையாம்
நாவாய் தனில் ஏறி அக்கரை செல்லலாம்

6. கீதையில் உவகை கொள்பவன் எவனோ
கனல் கடவுள் தனைப் பணிந்தவன் அவனே
ஏதும் இடைவெளி இலாது ஜபமும்
இயற்ற வேண்டிய கருமங்கள் எல்லாம்
செய்தவன். அனைத்தும் உணர்ந்த பண்டிதன் அவனே

7, 8 கீதைப் புத்தகம் இருக்கும் இடத்தில்
பிரயாகை முதலாம் தீர்த்தம் உறையும்
கீதையைப் போற்றிப் படிப்பவன் தன்னிடம்
மேதினி தனில் உள்ள அத்தனை தீர்த்தமும்

உலகிதனில் அவன் இருக்கும் வரையிலும்
உயிரை நீத்த பின்பும் உறைந்திடும்.
எல்லாத்தேவர், முனிவர், யோகியர்
இவனைக் காத்து இவனிடம் வசிப்பர்

9, 10 கீதை எந்தன் இதயமென்றும்
கீதை என் தத்துவ ஸாரமென்றும்
கீதை என் ஒளிமிகு அறிவென்றும்
கீதை என் அழியா ஞானமென்றும்
கீதை எனதுயர் இல்லமென்றும்
கீதையில் உறைகிறேன் என்பதையும்
கீதா ஞானம் கொண்டே உலகம்
மூன்றையும் காக்கிறேன் அறி பார்த்தா

11. பாண்டவா! கீதையின் ரஹஸியமாம்
பெயர்கள் தம்மை உரைக்கின்றேன்
வேண்டியே அவைகளை உச்சரித்தால்
வீழ்ந்தழியும் நம் பாவமெலாம்

12, 13 கங்கா கீதா காயத்ரீ ஸீதா ஸத்யா ஸரஸ்வதி
ப்ரஹ்ம வல்லீ ப்ரஹ்ம வித்யா த்ரிஸந்த்யா
முக்திகேஹினி
அர்த்தமாத்ரா சிதானந்தா பவக்னி ப்ராந்தி நாசினி
வேதத்ரயீ பரானந்தா தத்வார்த்தஞான மஞ்ஜரி

14. இத்தனை பெயர்களை நிச்சலமாம்
இனிய மனதுடன் ஜபித்திடுவோன்
உத்தம ஞான சித்தியையும்
உயரிய பரம பதம் அடைவான்

15. முன்னோர் தமை எண்ணி அவர் திதியில்
முனைந்தே கீதையை ஓதிடுவோன்
தன்னுடை முன்னோர் நரகம் விடுத்துத்
திருப்தியுடன் சுவர்க்கம் புகுந்திடுவார்

16. கீதையைப் பயிலும் மானிடருள்
கீழ்மேல் எனும் பேதம் கிடையாது
கீதை தரும் ப்ரஹ்ம ஸ்வரூப ஞானமதும்
கிடைப்பது அனைவர்க்கும் சரிசமமே

17. நேரில் பதுமநாபன் முகம்
வாரி வழங்கிய கீதை தனை
ஆர்வமுடன் பாடிப் படித்திடணும்
அதனை மனனமும் செய்திடணும்
அதை விஞ்சிடும் சாத்திரத் தொகுப்புண்டோ?

18. அத்தனை சாத்திர மயம் கீதை
அத்தனை தேவ மயம் ஹரியே
அத்தனை தீர்த்த மயம் கங்கை
அத்தனை வேத மயம் மனுவே

19. 'க' எனும் அட்சரம் தனில் துவங்கும்
கங்கை கீதை காயத்ரி
கோவிந்தன் எனும் நாமங்களும்
இதயத்திலிருந்தால் மறு பிறப்பில்லை

20. தேவகிமைந்தன் தந்த கீதையே
தாரணிதனில் ஒரே சாத்திரமாகும்
தேவகி மைந்தன் என வந்த பரமன்
தானே ஒரு தெய்வமாகத் திகழ்கிறான்
தேவகி மைந்தனின் நாமம் மந்திரம்
தேவன் அவன் சேவை ஒன்றே சருமம்

21. தாயும் நீயே தந்தையும் நீயே
நேயனும் நீயே சுற்றமும் நீயே
தூயதாம் கல்வியும் பொருளும் நீயே
தேவதேவா எனக்கு அனைத்தும் நீயே

பரப்ரம்மமாகிய ஸ்ரீகிருஷ்ணனுக்கு நமஸ்காரம்

ஹரி: ஓம் தத் ஸத்



## நூல் விவர அட்டவணை


| | |
|---|---|
| நூலின் பெயர் | : ஸ்ரீமத் பகவத் கீதை (இனிய, எளிய தமிழ்க் கவிதை வடிவில்) |
| ஆசிரியர் | : கொத்தமங்கலம் விஸ்வநாதன் |
| உரிமை | : ஆசிரியருக்கு |
| மொழி | : தமிழ் |
| முதல் பதிப்பு | : ஜூன், 2017 |
| தாள் | : 11.6 kg. வெள்ளைத் தாள் |
| நூலின் அளவு | : 1 x 8 கிரவுன் |
| அச்சு எழுத்து | : 11 புள்ளி |
| மொத்தப் பக்கங்கள் | : 192 |
| பைண்டிங் | : சாதா அட்டை |
| நூல் வெளியிடுவோர் | : விமலா விஸ்வநாதன்<br>A2, 2வது தளம்,<br>கொத்தமங்கலம் சுப்பு இல்லம்,<br>108, (107), அவ்வை சண்முகம் சாலை,<br>இராயப்பேட்டை,<br>சென்னை - 600 014. |

**விலை: ரூ 100/-**

| | |
|---|---|
| கணினி அச்சு | : வேலன் லேசர், 9444101753 |
| அச்சிட்டோர் | : உதயம் ஆப்செட்,<br>சென்னை-2. |



கொத்தமங்கலம் விஸ்வநாதன் B.A.B.L.,சிவகங்கை மாவட்டத்தைச் சேர்ந்த செட்டிநாட்டுப் பகுதியான கொத்தமங்கலத்தில் 1935ம் ஆண்டு கொத்தமங்கலம் ஸ்ரீ சுப்பு அவர்க ளுக்கும் திருமதி அலமேலு அம் மாளுக்கும் இரண்டாவது மகனாகப் பிறந்தவர். சட்டப் படிப்பு முடிந்தபின் T.V.S. ஸ்தாபனத்தில் 3 வருடங்கள் பின் ராம்கோ நிறுவனத்தில் 25 ஆண்டுகள் பணிபுரிந்து 1987 முதல் சென்னை உயர்நீதிமன்றத்தில் வழக்கறிஞராகப் பணி புரிகின்றார்.

தந்தையார் சுப்பு அவர்களுடன் வில்லிசை நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டு,தானும் பல சரித்திரங்களை இயற்றி வில்லிசை நிகழ்ச்சி கள் நடத்தி வருகின்றார்..தந்தையார் வழியில் எளிய நடையில் கீதையைக் கவிதை வடிவில் ஆக்கியுள்ளார். ‘கவிமாமணி’,‘பாரதி இலக்கியச் செல்வர்’,‘வில்லிசைத் தென்றல்’ முதலான விருதுகள் பெற்றவர்.இவருடைய குடும்பத் தினர் மனைவி விமலா,மகன் ஆனந்த் சுப்ர மணியன்,மகள் கவிதா கோபாலகிருஷ்ணன் ஆவார்கள்.